டால்ஸ்டாய்

# சிறு கதைகள்

*

(ஆறும் வகுப்புக்குரியது)









எம். எஸ். சுப்பிரமணியம்

# டால்ஸ்டாய் சிறு கதைகள்

(ஆறாம் வகுப்பிற்குரியது)



ஆசிரியர் :
எம். எஸ். சுப்பிரமணியம்

பிரசுரகர்த்தர் :
எம். எஸ். சுப்பிரமணியம்
கல்லிடைக்குறிச்சி :: திருநெல்வேலி ஜில்லா

 1965 [விலை 75 பை.

முதற் பதிப்பு—நவம்பர், 1960
இரண்டாம் பதிப்பு—ஏப்பிரல்—1961
மூன்றும் பதிப்பு—ஜுலை, 1961
நான்காம் பதிப்பு—ஆகஸ்டு, 1961
ஐந்தாம் பதிப்பு—ஜுன், 1965

APPROVED FOR CLASS USE
BY THE MADRAS TEXT-BOOK COMMITTEE
[Supplement to Part II—Section 3 of the
Fort St. George Gazette dated 10-5-1961, Page 10]



[10·9 கி. கி. வெள்ளைத் தாளில் அச்சிடப் பெற்றது.]

Kabeer Printing Works, Madras (211)

## ஆசிரியர் குறிப்பு

உயர்ந்த நோக்கங்களை மக்கள் மனத்தில் நன்கு பதியச் செய்வதற்குச் சுலபமாக எழுதப்பட்ட சிறு கதைகளே தக்க கருவிகளாகும். ருசிய நாட்டுத் தத்துவ ஞானியராகிய டால்ஸ்டாய் என்பார் எழுதிய சிறு கதைகள் இத்தகையவை என்பது உலக அறிஞர்கள் ஒப்புக்கொண்ட உண்மை. டால்ஸ்டாய் எழுதிய கதைகளுள் ஆறு கதைகள் இந்நூலில் அமைந்துள்ளன. டால்ஸ்டாயின் உயரிய கருத்துகளைத் தமிழ் மாணவர்கள் தெளிவாக உணரும் முறையில் இக்கதைகள் தமிழில் அமைக்கப்பட்டிருக்கின்றன.

## பொருளடக்கம்

# 1. குழந்தைச் சண்டை

## I

## விளையாட்டு வினையாதல்

அன்று ஏதோ ஒரு சிறப்பு நாள். காமு வும் இலட்சுமியும் அழகான பட்டுப் பாவாடை யும் சட்டையும் அணிந்திருந்தார்கள். அவர் கள் தலை, வாரிப் பின்னப்பட்டிருந்தது. காமு வுக்கு ஏழு வயதிருக்கும். இலட்சுமிக்கு எட்டு வயதிருக்கும். அவர் இருவரும் இணை பிரி யாத தோழியர். அவர்கள் அன்று காலையில் மிக்க மகிழ்வுடன் இருந்தார்கள். இருவரும் கைகளைக் கோத்துக்கொண்டு தெருவைக் கடந்து அப்பால் சென்றனர். முந்தின நாள் இரவில் அதிக மழை பெய்திருந்ததால், தெருப் பக்கத்திலுள்ள பள்ளங்களில் நீர் நிரம்பி யிருந்தது. குழந்தைகளுக்கு நீரில் இறங்கி விளையாடுவது மிகுந்த மகிழ்ச்சியல்லவா ? அவர்கள் பாவாடைகளைத் தூக்கிப் பிடித்துக் கொண்டு தண்ணீரில் இறங்கி நடந்தார்கள். அப்பொழுது காமு ஒரு கையால் நீரை வாரி வாரி இறைத்து விளையாடினாள். அந்த நீர் இலட்சுமியின் உடைகளில் பட, அவை நனைந்துவிட்டன. நீர் சேறாயிருந்ததால் இலட்சுமியின் உடைகள் அழுக்காகிவிட்டன. காமு வேண்டுமென்று இவ்வாறு செய்ய வில்லை. தன் ஆடைகள் பாழாகிவிட்டதைக் கண்ட இலட்சுமி, தன் தாய் மிகவும் கோபிப்

பாளென்று அஞ்சினுள். அவள் மனம் மிக்க கலக்கமடைந்தது. இலட்சுமி, “நீ ஏன் இவ்வாறு செய்தாய்? என் அம்மாள் என்னை அடிப்பாளே!” என்று காமுவைப் பார்த்துச் சொல்லிக்கொண்டே விம்மி விம்மி அழ ஆரம்பித்தாள். இதைக் கண்ட காமு, தனக்கு இதனுல் தீங்கு நேரிடுமென்று அஞ்சி ஓட ஆரம்பித்தாள்.

குழந்தையின் அழுகுரலைக் கேட்ட இலட்சுமியின் தாய் நாராயணி அம்மாள் அங்கு ஓடி வந்து, குழந்தையின் நிலையைக் கண்டாள். “இலட்சுமி, புதுப் பாவாடையை ஏன் சேற்று நீரில் நனைத்தாய்? மேலெல்லாம் நீராயிருக்கிறதே? குட்டையில் விழுந்து விட்டாயா?” என்று நாராயணி இலட்சுமியைக் கண்டித்தாள். “இல்லை அம்மா, காமுதான் என்மேல் நீரை வாரி இறைத்து இவ்வாறு செய்தாள்!” என்று சொல்லிக்கொண்டே இலட்சுமி ஓயாமல் அழுதாள். இதைக் கேட்டதும் நாராயணி அம்மாளுக்கு மிகுந்த கோபம் வந்துவிட்டது. அவள் உடனே தெருவுக்குப் போனுள்; அங்கு நின்றுகொண்டிருந்த காமுவைத் திட்டி அவள் கையைப் பிடித்துக் கரகரவென்று இழுத்து, “இலட்சுமியின் பாவாடையையும் சட்டையையும் ஏன் இவ்வாறு அழுக்காக்கினுய்?” என்று சொல்லி அவள் தாடையில் பளீரென்று அறைந்தாள். காமு பெருங்குரலில் அழுதுகொண்டே தன் தாய் அலர்மேலிடம் சென்ருள். அலர்மேல் அம்

மாள் மிகுந்த பரபரப்புடன் நாராயணியிடம் வந்து, "என் குழந்தையை ஏன் நீ இவ்வாறு அடிக்கவேண்டும்? குழந்தை தெருவில் போட்டுக் கிடக்கிறதா? உன் பணக்கொழுப்பா உன்னை இவ்வாறு செய்யச் சொல்கிறது? குழந்தையை அடித்த கையைத் தறிக்க வேண்டாவா!" என்று சொல்லி அவளைத் தாறு மாருகத் திட்டினுள்.

"உன் குழந்தைக்குப் பரிந்து பேச வந்து விட்டாயே! உன் குழந்தை—குழந்தையா அது! அந்தச் சனியன் செய்த செயலைப்பார்! என் குழந்தையைக் குட்டையில் தள்ளி அவள் புத்தம்புதுப் பாவாடையையும் சட்டையையும் நாசமாக்கிவிட்டதே! அதற்கு எவ்வளவு திமிர் இருக்கவேண்டும்! அதை அடித்ததா தவறு? அதைக் கொன்றிருக்கலாமே! உன் குழந்தையும், நீயும்! உன் வாயை மூடு!" என்று நாராயணி எதிர்த்தாள்.

"அடி பாவி! குழந்தையை இப்படியா அடிப்பது! தாடை வீங்கியிருக்கிறதே! உன் பணக்கொழுப்பினுலா இப்படி அடாத செயல் செய்கிருய்? நீ நாசமாய்ப்போக! உனக்குத் தெய்வம் கூலிகொடுக்கும்!" என்று அலர்மேல் சொல்ல, இருவருக்கும் வார்த்தை மிஞ்சிவிட்டது. பின்பு அவர்கள் தங்கள் கணவர்களை ஏவிவிட, அவர்கள் ஒருவரையொருவர் தாக்கிப் பலவாறு இழிவாகப் பேசத் தொடங்கினுர்கள். இதற்குள் ஊரார்கள் வேடிக்கை பார்க்கக் கூடிவிட்டார்கள். அவர்களுட்சிலர் என்ன

சமாதானம் சொல்லியும் இவர்கள் கேட்பதாய் இல்லை; தாங்கள் சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்லிக்கொண்டு இழிவான வார்த்தைகளை வாரி விட்டுக்கொண்டிருந்தார்கள். இவ்வாறு குழந்தைகளின் விளையாட்டுச் சண்டை வலுத்துப் பெரியவர்களின் சண்டையாய்விட்டது.

## II

## பாட்டி வருகை

நாராயணியின் மாமி பார்வதி அம்மாள் இக்குரலைக் கேட்டு அங்கு வந்தாள். பார்வதி அம்மாளுக்கு எழுதப் படிக்கத் தெரியாது. ஆயினும், அவள் இயற்கை அறிவுடையவள். கல்வியால் ஏற்பட வேண்டிய எல்லாக் குணங்களும் அவளிடம் இருந்தன. ஆழ்ந்த தெய்வ பத்தி, யாரிடத்தும் பகையின்மை, பொறுமை ஆகிய நற்குணங்கள் அவளிடம் இயற்கையிலே குடிகொண்டிருந்தன. படிப்பதற்குத் தெரியாத போதிலும் கேள்வியின் மூலமாய் இராமாயண, பாரத, பாகவதக் கதைகளை அவள் அறிந்திருந்தாள்; ஆதலால், புராண இதிகாசங்களிலிருந்து சிறு நீதிக் கதைகளைக் குழந்தைகளுக்கு மிக அழகாகவும், அவர்கள் கேட்டு மகிழும் விதமாகவும், மனத்திற் பதியும்படியாகவும் கூறுவாள். மிகுந்த பத்தி உடையவர்கள் போல ருத்திராக்ஷமாலையைக் கையில் பிடித்த வண்ணம், ஊரிலுள்ள ஒவ்

வொரு குடும்ப நடவடிக்கைகளையும் சரிவர விசாரித்தும், வீண் வம்பு அளந்துகொண்டும், பொருமை முதலியன விரவியுள்ள வார்த்தைகளை உச்சரித்துக்கொண்டும், இடையிடையே 'ராம ராம' என்று கிளிப்பிள்ளையைப் போல உச்சரிக்கும் போலிப் பத்தியுள்ள பாட்டிமார் போல வெற்று வேடத்துடன் நில்லாமல், உள்ளூற எல்லாம் வல்ல இறைவனைத் தன் மனத்தில் சிந்திக்கும் தன்மையுள்ளவள்; எப்பொருள்களிலும் இறைவனைக் கண்டு களிப்பவள். அவள் மருமகள் சிறிது வாய்த்துடுக்கு உள்ளவள். பார்வதி தன்னுடைய பொறுமையாலும், நற்குணத்தாலும் அவளைச் சீர்படுத்திவிட்டாள். ஆயினும், சிற்சில நேரங்களில் மருமகளின் இயற்கைக் குணம் தலை காட்ட ஆரம்பித்துவிடும். அதனாலேதான் இச்சண்டை நேரிட்டது.

காமுவின் தந்தையும், இலட்சுமியின் தந்தையும் இம்மாதிரி ஒருவரோடொருவர் தாறுமாருக 'வார்த்தையாடிக்கொண்டிருந்ததைக் கண்ட கிழவி பார்வதி அம்மாள், அவர்களைச் சமாதானப்படுத்த எவ்வளவோ முயன்ருள். அவள் அவர்களுக்கு எவ்வளவோ புத்திமதி கூறியும் அவர்கள் கேட்பதாயில்லை. அவளுடைய நல்வார்த்தைகள் செவிடன் காதில் சங்கூதினது போல ஆய்விட்டன.

"உன் பணத்திமிர் அல்லவா உன்னை இப்பொழுது இப்படிப் பேசச் சொல்கிறது? உன் செல்வம் சில நாள்களில் எப்படிப் போகப்

போகிறது பார்! அடே, நீ வெகு சீக்கிரம் பிச்சை எடுக்கும் நிலைமைக்கு வாராவிட்டால் பார்!'' என்ருன் காமுவின் தந்தை. ''அடே, வீண் வார்த்தை பேசாதே! பேசினல், பல் உடைபட்டுப்போம்!'' என்று இலட்சுமியின் தகப்பன் கூறினன்.

''பல்லை உடைத்தால் மற்றவர்கள் சும்மா இருப்பார்கள் என்ரு நீ நினைக்கிருய்? அடே, நீ பல்லை உடையடா பார்க்கலாம்! பார்ப்போமடா உன் திறத்தை! நீ அப்படிச் செய்வாயாைல் ஆண் பிள்ளைதானடா—'' என்று காமுவின் தந்தை சொல்லிக்கொண்டே இலட்சுமியின் தந்தையைத் தள்ளுவதற்கு வந்தான்; தள்ளியும் இருப்பான்; வாய்ச் சண்டை முற்றிக் கைச்சண்டை ஆரம்பமாயிருக்கும். அதற்குள் ஒரு நிகழ்ச்சி நிகழ்ந்தது.

## III

## குழந்தைகள் கூடல்

சண்டை செய்த சிறிது நேரத்திற்குள் இலட்சுமியும் காமுவும் கூடிவிட்டனர். இருவரும் நேராகக் குட்டைக்குச்சென்றனர்; ஒரு கொட்டாங்கச்சியால் தரையைத் தோண்டிக் கொண்டே குட்டையிலிருந்து நீரைத் தெருவுக்கு ஒரு சிறுகால்வாய் மூலமாக இறைத்துக் கொண்டிருந்தார்கள். காமு அந்த ஓடையில் காகிதத்தால் செய்த ஓடத்தை மிதக்க விட்டு வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தாள். இவ்

வாறு இருவரும் மிகுந்த மகிழ்ச்சியுடன் ஆடி யும் பாடியும் தெருவில் தோண்டிய வாய்க்கா லில் நீரைப் பாய்ச்சிக்கொண்டு தம் பெற்ருேர் சண்டை செய்துகொண்டிருந்த இடத்திற்கே வந்துவிட்டனர்.

ஆ! குழந்தைகளின் மகிழ்ச்சியே மகிழ்ச்சி! அவர்கள் சிரிப்பில் ஓர் இன்பம் தோன்றுகிறது! அவர்கள் விளையாட்டில் ஒரு தெய்விகம் விளங்குகிறது!

ஏதோ வேறு ஒருவரும் செய்ய முடியாத செயலைத் தாங்கள் செய்து முடித்துவிட்டதாக இச்சிறு குழந்தைகள் மிகுந்த பெருமை கொண்டார்கள். பெற்ருேர்களுக்குள் நடந்த சண்டையின் இடையில் இக்குழந்தைகளின் களியாட்டத்தின் சந்தடி மிக இனிமையாய் இருந்தது. பெற்ருேர்களுக்குப் புத்தி புகட்ட இதுவே சமயமென்று பார்வதி அம்மாள் உணர்ந்து, அவர்களை நோக்கி, "இந்தக் குழந்தைகளைப் பாருங்கள்! உங்களைக்காட்டி லும் இவர்களே அறிவு உடையவர்கள். இவர் களிடமிருந்து நீங்கள் ஒரு படிப்பினையைக் கற்றுக்கொள்ள வேண்டும். இவர்கள் தாங் கள் சண்டை செய்ததையும் மறந்துவிட்டு, யாதொரு மாறுபாடும் இல்லாமல், ஒருவரோ டொருவர் எவ்வளவு அன்புடனும் மகிழ் வுடனும் விளையாடுகிருர்கள்! உங்களுக்கு வெட்கம் இல்லையா!" என்ருள்.

தங்கள் குழந்தைகள் பகைக் குணமில்லா மல் கள்ளங்கபடற்ற மனத்துடன் விளையாடு

வதைக் கண்டு, அவர்களுக்கிருக்கும் மன நிலேயும் பொறுமையும் தங்களுக்கு இல்லேயே என்று காமுவின் தந்தையும் இலட்சுமியின் தந்தையும் வெட்கங்கொண்டு, 'வீண் சண்டையை விலே கொடுத்து வாங்கினேமே!' என்று மனம் வருந்தித் தங்கள் வீடுகளுக்குத் திரும்பினர்கள்.

குழந்தைகள் கள்ளங்கபடு அற்றவர்கள். அவர்கள் மனம் மிகவும் தூய்மையானது. ஆண்டவன் அருளேப் பெற அவர்கள் உள்ளத்தைப் போன்று அனேவர் மனமும் தூய்மையடைய வேண்டும்.

> " சேய்போல் இருப்பர் கண்டீர்,
> உண்மை ஞானம் தெளிந்தவரே."

என்ருர் ஒரு பெரியார்.

> " குழந்தைகளேப் போல மாசற்ற மனத்தைப் பெருதவர்கள் மோட்ச உலகத்தை அடைய முடியாது."

என்ற கிறிஸ்து நாதரின் பொன் போன்ற மொழியையும் சிந்தியுங்கள்.

குழந்தைகள் ஒருவரோடொருவர் சண்டையிட்டுக்கொள்வதும், பின்பு கூடிக்கொள்வதும் இயல்பே. அவர்கள் களங்கமற்ற மனத்துடன் இருப்பதே இதற்குக் காரணம். பெற்ருேர்கள் குழந்தைகளின் தன்மையை அறியாமல் அவர்களுடைய அற்பச் சண்டைகளில் தலேயிட்டு, துரும்பைத் தூணுக்குவது போலப் பெரிய சண்டையை வளர்த்து நெடுநாள் பகை கொள்ளாமல் இருக்கும்படி பார்த்துக் கொள்ள வேண்டுவது இன்றியமையாதது.

# 2. உண்மை ஒரு நாளைக்கு வெளிப்படும்

## I

## சுந்தரேசன் சந்தைக்குச் செல்லல்

பார்வதி புரத்தில் சுந்தரேசன் செட்டி சிறந்த வியாபாரி. அவனுக்கு அவ்வூரில் இரண்டு கடைகளும் ஒரு வீடும் உண்டு; கையில் சிறிது ரொக்கமும் நிலமும் உண்டு. அவ்வூரில் அவன் மிகவும் நல்லவன் என்று பேர் பெற்றவன். அவன் இளமையில் தீயவர் சிலர் கூட்டுறவால் சிறிது குடிப்பழக்கத்துக்கு உட்பட்டிருந்தான். அவனுக்குத் திருமண மாகி மனைவி வீட்டிற்கு வந்த பின்பு, அந்தக் கெட்ட பழக்கம் அவனை விட்டு அறவே ஒழிந் தது. மற்ற வியாபாரிகளைப்போல எப்பொழு தும் பணமே குறி என்று அதில் மட்டும் கருத் தைச் செலுத்தாமல், அவன் தன் அறிவைப் பல விதங்களிலும் வளர்த்து வந்தான்; புதிது புதிதாக வெளி வரும் நல்ல நூல்களை வாங்கி வாசிப்பதற்குப் பின்னடையான்; தினசரிப் பத்திரிகைகளை வாங்கி வாசியாமலிரான். இசையிலும் அவனுக்குச் சிறந்த ஞானம் உண்டு. அவன் நல்ல குரற்செல்வமும் பெற் றவன். பத்தி கனிந்த பாடல்களைத் தன் இன்னிசைக் குரலில் அவன் பாடுகையில், எவர் மனமும் உருகாமல் இராது. சுந்தரேசன்

வேடிக்கையான பேர்வழி; யாரிடமும் கலகல வென்று இனிமையாகப் பேசுவான். அவனிடம் எல்லாரும் அன்பு கொண்டனர். அவ்வூரில் அவன் மதிப்புக்குரியவனுய் விளங்கினுன்.

பார்வதிபுரத்திலிருந்து ஐம்பது கல்லுக்கு அப்பாலுள்ள முருகனூர் என்னும் ஊரில் சுந்தரேசன் தன் சரக்குகளைக் கொண்டுபோய் விற்று வருவது வழக்கம். அவன் ஒரு நாள் அவ்வாறு போக எண்ணித் தன் மனைவியிடம் விடை கேட்டான். அப்பொழுது அவன் மனைவி, "நாதரே, இன்று நீங்கள் புறப்பட வேண்டா. நேற்றிரவு நான் ஒரு கொடியகனவு கண்டேன். நீங்கள் பட்டணத்திலிருந்து திரும்பி வரும்பொழுது உங்களது தலை நரைத்திருந்தது. நீங்கள் கிழப்பருவமெய்தியிருந்தீர்கள். இதனுல் உங்களுக்கு ஏதாவது தீங்கு ஏற்படுமோ என்று என் மனம் பதறுகிறது! நான் உங்களைத் தடை செய்ததாக எண்ணுதீர்கள். இன்று நீங்கள் போக வேண்டா," என்ருள்.

இதைக்கேட்ட சுந்தரேசன் கொல்லென்று சிரித்தான்; "அடி பைத்தியமே, உன் கனவினுல் எனக்கு நன்மையே உண்டாகப் போகிறது. தலை நரைத்தது நான் மிகுந்த செல்வத்துடன் திரும்பி வருவேன் என்பதற்கு அறிகுறியே தவிர, வேறன்று. என் சரக்குகள் முழுமையும் நல்ல விலைக்கு விற்கும். நான் மிகுந்த இலாபம் அடைவேன். திரும்பி வரும்பொழுது உனக்கு நல்ல ஆடைகளையும் அணிகளையும் நான் வாங்கி வருகிறேனு இல்லையா பார்! இது

உண்மை. நீ கவலைப்பட வேண்டா. மகிழ்வுடன் இரு. விரைவில் திரும்பிவிடுவேன்,'' என்று சொல்லி, அவளைச் சமாதானப்படுத்தி, அவளிடம் விடை பெற்றுக்கொண்டான்.

சுந்தரேசன் சாமான்களை ஒரு வண்டியில் ஏற்றிக்கொண்டு முருகனூருக்குப் பயணம் ஆனான்; போகும் வழியில் தனக்கு அறிமுகமான வேறொரு வியாபாரியைச் சந்தித்தான். இருவரும் சேர்ந்தே பயணம் செய்தனர். சித்தன் பட்டி என்னும் ஊரை அடைந்ததும் இருட்டிவிட்டது. அந்த ஊரிலுள்ள விடுதியிலேயே இருவரும் அன்றிரவு தங்கினர். இரவு சாப்பாடானதும் சுந்தரேசனும் அந்த வியாபாரியும் வெவ்வேறு அறைகளில் படுத்துறங்கினார்கள்.

சுந்தரேசன், அதிகாலையிலே எழுந்திருக்கும் வழக்கமுள்ளவன்; வெயிலின் கொடுமைக்கு உள்ளாகாமல் சீக்கிரம் ஊர் போய்ச் சேரலாமென்ற எண்ணத்துடன், அன்று விடியற்காலம் மிகு விரைவாய் எழுந்துவிட்டான்; விடுதிக்காரனுக்கு உரிய கட்டணத்தைச் செலுத்தி வண்டியைக் கட்டிக்கொண்டு புறப்பட்டான்.

## II

## எதிர் பாராத தொல்லை

சுந்தரேசன் சுமார் பத்து மணிக்கு வழியிலுள்ள தங்கும் விடுதியில் தன் சாமான்களை

இறக்கி வைத்துவிட்டுச் சிறிது இளைப்பாறி ஞன்; பின்னர்க் களிப்புடன் பாடிக்கொண் டிருந்தான். அப்பொழுது விடுதியின் வாயி லில் ஒரு குதிரை வண்டி வந்து நின்றது. அதி லிருந்து போலீஸ் அலுவலர் ஒருவரும், இரண்டு சிப்பாய்களும் இறங்கினர்கள். அந்த அலுவலர் நேரே சுந்தரேசனை அணுகி, அவன் பக்கத்தில் உட்கார்ந்து, " நீங்கள் யார்? எங் கிருந்து வருகிறீர்கள்?" என்ருர்.

சு: ஐயா, என் பெயர் சுந்தரேசன்செட்டி, நான் பார்வதி புரத்திலிருந்து வருகிறேன்.

அ: நேற்றிரவு நீர் எங்குத் தங்கினீர்?

சு: வரும் வழியில் சித்தன்பட்டியிலுள்ள ஒரு விடுதியில் தங்கினேன்.

அ: உம்முடன் வேறு யாராவது வந்திருந் தனரா, அல்லது நீர் மட்டுந்தான் அங்குத் தங்கியிருந்தீரா?

சு: என் நண்பர் ஒரு வியாபாரியுங்கூட வந்திருந்தார்.

அ: இன்று காலையில் உம் நண்பரைப் பார்த்தீரா?

சு: நான் பார்க்கவில்லை.

அ: எல்லாரும் எழுந்திருப்பதற்கு முன் னரே அதிகாலையிலேயே நீர் விடுதியிலிருந்து வருவதற்குக் காரணம் என்ன?

இந்தமாதிரிக் கேள்விகள் சுந்தரேசனுக்கு மிகவும் வியப்பை உண்டாக்கின.

சு: இதென்ன! நீங்கள் ஒரு கைதியைக் குறுக்கு விசாரணை செய்வதுபோல என்னிடம்

கேள்விகள் கேட்கிறீர்களே! நான் என்ன திருடனு, அல்லது கொலைக் குற்றம் செய்தேனு? ஏனையா இம்மாதிரி வேண்டாக் கேள்விகள்? நான் ஒரு வியாபாரி. என் சரக்குகளை விற்பதற்காக முருகனூர் போகிறேன்.

அலுவலர், "ஐயா, நான் போலீஸ் அலுவலன். உம்முடன் இரவில் விடுதியில் தங்கியிருந்த வியாபாரி இன்று விடியற்காலம் படுக்கையிலே கொலையுண்டிருக்கிருர். உம்மீது எங்களுக்கு ஐயம் இருக்கிறது. ஆகையால், உம் சாமான்களைச் சோதனை செய்யப்போகிறோம்," என்ருர்.

அந்த அலுவலரும் அவருடைய சேவகர்களும் சுந்தரேசன் மூட்டை முடிச்சுகளையெல்லாம் ஒவ்வொன்ருக அவிழ்த்து, சோதனை செய்தார்கள். இரண்டு நிமிடங்களுக்குள் அந்தப் போலீஸார் ஒரு மூட்டையிலிருந்து ஒரு கத்தியை உருவினுர். அதில் இரத்தம் தோய்ந்திருந்தது.

"ஐயா, செட்டியாரவாள், கையும் மெய்யுமாக அகப்பட்டுக்கொண்டீரே! இந்தக் கத்தி யாருடையது? இதில் இரத்தக் கறை ஏற்பட்ட காரணம் என்ன? மிகுந்த யோக்கியர் போலச் சில நாழிகைக்கு முன்பு நடித்தீரே! என்ன திருதிருவென்று விழிக்கிறீர்!" என்ருர் அலுவலர்.

தன் மூட்டையிலிருந்து ஒரு கத்தியை அந்த அலுவலர் எடுத்ததையும், அதில், இரத்

தக்கறை ஏற்பட்டிருந்ததையும் பார்த்த சுந்த ரேசன், மிகுந்த திகிலடைந்தான். அவன் உடம்பு பதறிற்று; கண்கள் சுழன்றன; உலகம் இருண்டது போலத் தோன்றிற்று; பேச நா எழவில்லை. அவன், "எ-ன-க்-கு-த் தெ-ரி-யா-து" என்று நாக்குழறத் தழுதழுத்த குரலில் பதில் உரைத்தான்.

அலுவலர், "உம்மைத் தவிர வேறு ஒரு வரும் அந்த அறையில் இல்லை. அறையோ, உட்பக்கம் தாழ் இடப்பட்டிருந்தது. எல்லா ருக்கும் முன்பாகவே நீர் எழுந்து போய் விட்டீர். உம் மூட்டையிலிருந்துதான் நான் கத்தியை எடுத்தேன். நீர் இதை அறிவீர். கத்தியிலும் இரத்தக் கறை இருக்கிறது. ஆகையால், வியாபாரியைக் கொலை செய்தவர் உம்மைத் தவிர வேறு யாருமில்லை. இதற்கு வேறு சாட்சி வேண்டுமா? அந்த வியாபாரி யிடமிருந்து எவ்வளவு பணம் கவர்ந்தீர்? உண்மையைச் சொல்லிவிடும்! இனி நடந் ததை மறைப்பதில் பயன் இல்லை," என்றார்.

சுந்தரேசனுக்கு இன்னது செய்வது என் பது தெரியவில்லை. "என் மனைவி மக்கள் பேரில் ஆணையிட்டுச் சொல்லுகிறேன்! இது உண்மை. இந்தக் கத்தி என்னுடையதன்று. நான் கொண்டு வந்த பணத்தைத் தவிர, என் னிடம் வேறு பணம் இல்லை. இரவில் சாப்பாட் டிற்குப் பிறகு நான் அந்த வியாபாரியைப் பார்க்கவும் இல்லை. நான் பணத்திற்கு ஆசைப் பட்டவன் அல்லேன். நான் கொலை செய்யவு

மில்லே. குற்றமற்ற என்மீது வீண் பழி சுமத் தாதீர்கள் ?'' என்று சுந்தரேசன் சொன் ஞன். அவன் பேசின மாதிரியும், அவனுடைய முகக் குறிகளும் அவன் ஒரு குற்றவாளியே என்று அந்த அலுவலரை நினைக்கச் செய்தன.

"மெய்யுடை ஒருவன் சொலமாட் டாமையால்,
பொய்போ லும்மே, பொய்போ லும்மே."

என்ற அறிஞர் மொழி சுந்தரேசன் செயலில் மிகவும் பொருத்தமாய் இருந்தது.

சுந்தரேசன் கைகளில் விலங்கு மாட்டப் பட்டது. அவனை வண்டியில் ஏற்றி அடுத்த பட்டணத்திற்கு விசாரணைக்காகக் கொண்டு போனார்கள். சுந்தரேசன் மனம் அனலிடைப் பட்ட மெழுகாய் உருகிற்று. "நான் ஒரு குற்ற மும் செய்தறியேன் ! என்னை ஏன் இந்த வீண் பழி வந்து சூழ்ந்துகொண்டது ! கடவுளே, இதுவும் உன் செயலோ !

"பாராதி தனிலுள்ள செயலெலாம் முடிவிலே
பார்க்கில்நின் செயலல்லவோ ?
பார்க்குமிடம் எங்கும்ஒரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணனந்தமே !"

என்று கடவுளைத் துதித்தான். பட்டினத்தடி கள் ஆழ்ந்த தியானத்திலிருக்கையில் அரண் மனையிலுள்ள நகைகளைத் திருடியவர் அவரே என்று அவர்மேல் குற்றஞ்சாட்டிக் கொண்டு போனதும், அவரைக் கழுவேற்றுகையில்,

"என்செய லாவது யாதொன்று மில்லை இனித்தெய்வமே
உன்செய லேயென்று உணரப்பெற் றேன் ;இந்த

ஊனெடுத்த

பின்செய்த தீவினை யாதொன்று மில்லை; பிறப்பதற்கு
முன்செய்த தீவினை யேயிங்ங னேவந்து மூண்டதுவே.''

என்று அவர் பாடிய பாடலும் சுந்தரேசன் நினைவுக்கு வந்தன.

## III

## சிறை வாழ்வும் மனைவியின் வருகையும்

விசாரணை நாளும் வந்தது. பார்வதி புரத்தில் சுந்தரேசனைப் பற்றிப் பலரிடத்திலும் விசாரித்தார்கள். "இளமையில் குடிப் பழக்கத்துக்கு ஆட்பட்டிருந்தானே தவிர, அவனிடம் வேறு ஒரு தீய பண்பும் இல்லை. அவன் மிகவும் நல்லவன்,'' என்று எல்லோரும் ஒரு முகமாகவே கூறினர். யார் சொல்லி என்ன பயன்! விதியை யாரே வெல்ல வல்லவர்? சுந்தரேசனுக்கு மாறுகச் சாட்சிகள் அமைந்தன. ஆகையால், சுந்தரேசன் குற்றவாளியே என்று தீர்ப்புச் சொல்லப்பட்டு, தண்டிக்கப் பட்டான். தான் குற்றவாளி அல்லவென்று அவன் எவ்வளவோ மன்ருடினுன். ஒன்றும் பயன் படவில்லை.

சுந்தரேசனிடமிருந்து பணமும் சாமான்களும் பறிமுதல் செய்யப்பட்டன. அவன் கைதிக்குரிய உடையுடன் சிறையிலிருந்தான்.

தன் கணவன் கொலைக்குற்றம் செய்ததற்குச் சிறையில் இருக்கிருனென்பதைக் கேள்வியுற்ற சுந்தரேசன் மனைவி தூண்டிலில் அகப்பட்ட மீன்போலத் துடித்தாள்; தன் குழந்தை

களையும் கூட்டிக்கொண்டு சுந்தரேசனிருக்கும் பட்டணத்துக்கு வந்தாள் ; சிறை அதிகாரிகளிடம் தன் கணவனைக் காண உத்தரவு பெற்று அவன் இருக்குமிடம் வந்தாள். ஒருவரையொருவர் கண்டதும் துயரம் நெஞ்சைப் பிளக்க இருவரும் 'கோ'வென்று அழுதனர்; சிறிது நேரம் பேச்சற்று இருந்தனர். "நீங்கள் கைதி உடையில் இங்கிருக்கும் கோலத்தைக் காண என் மனம் பொறுக்கவில்லையே! நான் அன்று உங்களைப் புறப்பட வேண்டா என்றேனே! அதை மீறி வந்தீர்களே! இனி நான் என் செய்வது! நான் திக்கற்றவளானேனே! ஐயோ! எனக்கு வேறு கதி ஏது?" என்று மேலும் மேலும் கூறி அழுதாள் மனைவி.

"குற்றமற்ற என்னை இவ்விதம் தண்டிப்பது நியாயமன்று. விடுதலை செய்யவேண்டும் என்று அதிகாரிகளிடம் முறையிட்டுப் பார். அழுவதாற் பயனென்ன? நோவதாற் பயன் என்ன? பங்கயத்தோன் எழுதாப் படி வருமோ? சலியாதிரு! மனத்தைத் தேற்றிக்கொள்!" என்றான் சுந்தரேசன்.

"நாதரே, நான் அதிகாரிகளிடம் முறையிட்டும் பயனில்லையே! நீங்கள் ஏன் இந்தச் செயலைச் செய்யத் துணிந்தீர்கள்? உண்மையாகவே நீங்கள் கொலை செய்யவில்லையா? என்னிடம் ஒளியாமல் சொல்லுங்கள்!" என்று கேட்டாள் அவன் மனைவி.

"ஆ! நீயுங்கூடவா என்னை ஐயுறுகிறாய்!" என்று சுந்தரேசன் சொல்லி வாய்

மூடுமுன் ஒரு சிறை அதிகாரி அவ்விடம் வந்து, "நேரமாய்விட்டது. இனி நீங்கள் இங்குப் பேசிக்கொண்டிருக்க முடியாது," என்று சொல்லி இருவரையும் பிரித்துவிட்டான். சுந்தரேசன் மனைவி கணவனிடம் விடை பெற்றுக்கொண்டாள்.

"என் மனைவியுங்கூட அல்லவா என்னை ஐயுறுகிறாள்! இனி என்னை யார்தான் நம்பப் போகிறார்! நான் சிறைத் துன்பத்திற்காக வருந்தவில்லை. என்னைக் கொலையாளி என்றல்லவோ உலகம் எண்ணும்! உண்மையில் நான் குற்றவாளி அல்லேன் என்பதை உலகத்தாருக்கு எப்படி விளக்கப்போகின்றேன்! இது ஒன்றுதான் என் மனத்தைப் புண்படுத்துகிறது! நான் என்ன சொல்லியும் ஒருவரும் நம்பவில்லையே! இறைவனே, நான் குற்றமற்றவன் என்பது உனக்கு மட்டும் தெரியும். நீயே எனக்கு இனிப் புகலிடம். என்னுடைய குறைகளை மனிதர்களிடம் சொல்லித் தீர்த்துக் கொள்ள முயல்வது வீண். இனி எனக்கு நீயே கதி. உனது அருளே எனக்குப் புகலிடம். அதிகாரிகளிடம் மனுச் செய்துகொள்வதைக் காட்டிலும் உன்னிடம் என் குறைகளைச் சொல்லித் தீர்த்துக்கொள்வதே சிறந்தவழி. எல்லாம் உன் பொறுப்பு! நீ விட்டதே வழி!"

"அன்னையிலாச் சேய்போல் அலக்கணுற்றேன் கண்ணுர
என்னகத்தில் தாய்போ லிருக்கும் பராபரமே!
"ஆர்இருந்தென்? ஆர்போயென்! ஆரமுதாம் நின்அரு
சீர்இருந்தால் உய்வேன் சிவமே! பராபரமே! [ளின்

> "ஊருஞ் சதமல்ல ; உற்ருர் சதமல்ல ; உற்றுப்பெற்ற
> பேரும் சதமல்ல; பெண்டிர் சதமல்ல; பிள்ளைகளும்
> சீரும் சதமல்ல; செல்வம் சதமல்ல; தேசத்திலே
> யாரும் சதமல்ல; நின் தாள் சதம்கச்சி ஏகம்பனே !"

என்று எண்ணிக் கடவுளைத் துதித்திருந்தான்.

அன்றுமுதல் சுந்தரேசன் கடவுளின் கருணையில் நம்பிக்கை கொண்டான் ; அவரை வேண்டுவதிலேயே தன் காலத்தைக் கழித்தான். அவனிடம் முன் இருந்த மகிழ்ச்சி போய்விட்டது. அவன் யாருடனும் பேசுவதில்லை. பொறுமை அவனிடம் குடிகொண்டது. கடவுள் நினைவு அவனிடம் நிலை பெற்றது. சுந்தரேசன் ஒரு புதிய மனிதனுய்விட்டான்.

அவனைச் சிறைச்சாலை ஏவலர்கள் மிகவும் கொடுமையாக நடத்தினுர்கள் ; சவுக்கால் அவனைப் பலமாக அடித்தார்கள். அதனுல் அவன் உடல் முழுவதும் புண்ணுகி, இரத்தம் பெருகும். அவன் வலி பொறுக்க முடியாமல், "ஐயோ ! ஐயோ !" என்று கதறுவான். இவ்வாறு சில திங்கள் கழிந்த பின் அவன் வேறு சிறைக்கு மாற்றப்பட்டான்.

சிறையில் அவன் பல விதச் சாமான்கள் செய்யக் கற்றுக்கொண்டான் ; கைத்தொழிலில் நல்ல தேர்ச்சிபெற்ருன் ; தான் செய்த சாமான்களை விற்று வரும் பணத்தால் தோவாரம், திருவாசகம், திருவாய்மொழி பொன்ற நூல்களை வாங்கினுன் ; சிறையில் வெளிச்சம் இருக்கும் பொழுது அவற்றை வாசிப்பான்; மற்ற நேரங்

களில் கடவுளை நினைத்து வேண்டுவான். அவனுடைய பொறுமையையும், தெய்வ பத்தியையும் கண்ட சிறை அதிகாரிகள், அவனிடம் நல்ல மதிப்பு வைத்திருந்தார்கள். சுந்தரேசன் தன்னுடனிருந்த கைதிகளிடம் அன்பு காட்டி, நீதி நெறிகளை அவர்களுக்குக் கற்பித்து, அவர்களைச் சீர்திருத்தினன். சுந்தரேசனிடம் பழகினது காரணமாக மற்றக் கைதிகளிடம் முன் இருந்த தீய குணங்கள் நீங்கின. தெய்வபத்தி, உண்மை, பொறுமை முதலிய குணங்கள் அவர்களிடம் வேரூன்றித் தழைக்க ஆரம்பித்தன. அவர்கள் மனம் முற்றிலும் மாறுபாட்டை அடைந்தது. அவர்கள் சுந்தரேசனைக் குருவாகக் கொண்டு ஒழுகினர்கள். சிறை அதிகாரிகளிடம் தங்கள் குறைகளைத் தெரிவிக்க வேண்டின் சுந்தரேசனைக் கொண்டே தெரியப்படுத்துவார்கள்; தங்கள் சச்சரவுகளை அவனிடம் முறையிட்டுத் தீர்த்துக்கொள்வார்கள்.

சுமார் இருபத்தாறு ஆண்டுகள் சுந்தரேசன் சிறையில் கைதியாய் வாழ்ந்துவந்தான். அவன் தலை நரைத்துவிட்டது; தாடி நீண்டு வளர்ந்திருந்தது. அவன் தொண்டு கிழவனைப் போலக் காணப்பட்டான். அவன் மக்களிடமிருந்து யாதொரு செய்தியும் அவனுக்குத் தெரியவில்லை.

# IV

## புதிய கைதி சுப்பன் வருகை

ஒரு நாள் சில புதிய கைதிகள் வந்தார் கள். மற்றக் கைதிகள் அவர்களைச் சுற்றிக் கொண்டு அவர்கள் சிறைத் தண்டனை யடைந்த காரணத்தை வினவினர்கள். ஒவ் வொருவனும் அவனவன் வரலாற்றைச் சொல் லிக்கொண்டிருந்தான். சுந்தரேசன் வாடிய முகத்துடன் தலை கவிழ்ந்து அவர்களருகில் உட்கார்ந்துகொண்டு அவர்கள் சொல்வதைக் கேட்டுக்கொண்டிருந்தான். புதியவர்களாய் வந்த கைதிகளுள் சுமார் ஐம்பது வயதுள்ள வனும், நல்ல பலமுடையவனும், கறுப்பு நிற முள்ளவனுமான ஒருவன் தான் தண்டனை யடைந்த வரலாற்றைக் கூறும்போது, "நம் முடைய போலீஸ் நியாயத்தை என்னென்று சொல்வது! அவர்கள் குற்றவாளிகளைக் கண்டு பிடித்துத் தண்டிப்பதைப் பார்த்தால், எனக்கு ஒரு பக்கம் சிரிப்பும், மற்ருெரு பக்கம் கோப மும் வருகின்றன. நான் இப்பொழுது ஒரு குற்றமும் செய்யவில்லை. நான் திருடினதாகப் பொய்க் குற்றம் சாட்டி, அதற்குப் பல சாட்சிகளையும் கொண்டு வந்து, என்னை இங்கே உள்ளே தள்ளிவிட்டார்கள். ஆனல், சில ஆண்டுகளுக்கு முன் உண்மையிலேயே நான் ஒரு பெரிய குற்றம் செய்தேன். அந்தக் குற்றத்தை இன்னும் இந்தப் போலீஸார்

களால் கண்டு பிடிக்க முடியவில்லை. அப்பொழுது நான் அந்தக் குற்றத்துக்காகத் தண்டனை அடைய வேண்டியவன். இப்பொழுது குற்றம் செய்யாதிருக்கையில் எனக்குத் தண்டனை கிடைத்திருக்கிறது,'' என்றான்.

"அண்ணே, உன் பெயரென்ன? நீ எந்த ஊர்?'' என்று அவனிடம் மற்றவர்கள் கேட்டார்கள்.

"என் பெயர் சுப்பன். என் ஊர் பார்வதிபுரம். என் மனைவி, மக்கள் எல்லாரும் அங்கேதான் இருக்கிறார்கள்,'' என்றான் புதுக் கைதி.

தன் ஊர்ப்பெயரைக் கேட்டதும் சுந்தரேசன் தலை நிமிர்ந்து சுப்பன் பக்கம் திரும்பினான். "சுப்பா, பார்வதிபுரத்தில் சுந்தரேசன் செட்டியாரை உனக்குத் தெரியுமா? அவர் வியாபாரம் எப்படியிருக்கிறது? அவர் குடும்ப நலத்தைப்பற்றி உனக்கு ஏதாவது தெரியுமா?'' என்று கேட்டான் சுந்தரேசன்.

"தெரியாமலென்ன? நன்றாய்த் தெரியும். சுந்தரேசன் செட்டியார் பெரிய பணக்காரர். அவ்வூரிலும் அவருக்கு நல்ல பெயர்தான். ஆனால், அவர் ஏதோ கொலை செய்தாரென்று அவரைத் தண்டித்துவிட்டார்களாம். அவரும் நம்மைப்போல அரசினர் விருந்தாளியாய்த்தான் இருக்கிறாராம். உம்மைப் பார்த்தால் நல்லவர் போலத் தோற்றுகிறதே! உமக்கு இந்தக் கதி வந்ததன் காரணம் யாதோ?'' என்று சுந்தரேசனைக் கேட்டான் சுப்பன்.

சுந்தரேசன் சிறிது நேரம் பேசாதிருந் தான்; பின்பு, "நான் செய்த பாவத்தை அனு பவிக்கிறேன்! சுமார் இருபத்தாறு ஆண்டு களாகச் சிறையில் இருக்கிறேன்!" என்று கூறினன். "நீர் அப்படி என்ன குற்றஞ் செய்துவிட்டீர்?" என்று மறுபடியும் சுப்பன் வினவ, சுந்தரேசன், "நான் கொடியவன். இந்தத் தண்டனை எனக்கு நியாயமே," என்று சொல்லிவிட்டுச் சும்மா இருந்தான். இதைத்தவிர வேறென்றும் அவன் சொல்ல வில்லை.

ஆனல், மற்றக் கைதிகள் சுந்தரேசன் வரலாற்றைச் சுப்பனுக்குத் தெரிவித்தார்கள்; "யாரோ ஒரு படுபாவி ஒரு வியாபாரியைக் கொன்றுவிட்டு அந்தக் கத்தியைச் சுந்தரேசர் மூட்டையில் வைத்துவிட்டுத் தப்பிவிட்டான். அதற்காகச் சுந்தரேசரே கொலை செய்தார் என்று அதிகாரிகள் அவரைத் தண்டித்திருக் கிருர்கள்," என்ருர்கள்.

திடீரெனச் சுப்பன் முகத்தோற்றம் மாறி யது. அவன் தேகம் நடுங்கிற்று. அவன் பிறர் தன்னைச் சந்தேகிக்கா வண்ணம் ஒரு விதமாகத் தன்னைச் சமாளித்துக்கொண்டு, "என்ன ஆச்சரியம்! மிகவும் அழகாக இருக் கிறது இந்தச் சமாசாரம்! செட்டியாரே, நீர் இவ்வளவு சீக்கிரம் ஒரு பெரிய கிழவராய்விட் டீரே! ஆச்சரியம்!" என்று சுந்தரேசனைப் பார்த்துச் சொன்னன். அவன் சொன்ன வார்த்தைகளிலிருந்து வியாபாரியைக்கொன்ற

வன் சுப்பனுக்குத்தெரிந்திருக்கலாமோ என்று சுந்தரேசன் சந்தேகித்தான். சுந்தரேசன் சுப்பனிடம், "இந்தக் கொலையைப்பற்றி நீ கேள்விப்பட்டிருக்கிருயா? என்னைக்கூட உனக்குத் தெரியும் போலிருக்கிறதே! வியாபாரியைக் கொன்றவன் யாரென்பது உனக்குத் தெரியுமா?'' என்று கேட்டான். இந்தக் கேள்விகளைக் கேட்டதும் சுப்பன் சிரித்து, "நல்ல கேள்வி கேட்டீர்! யாருடைய பையில் கத்தி இருந்ததோ அவனே வியாபாரியைக் கொன்றிருக்க வேண்டும். மூட்டையைத் தலையணையாக வைத்துப் படுத்திருக்கும் பொழுது அதனுள் வேருெருவன் கத்தியை எவ்வாறு வைக்க முடியும்? அப்படியே வைத்தாலும், அப்பொழுது நீர் எழுந்துவிடமாட்டீரோ?'' என்ருன். இவ்வார்த்தைகள் சுந்தரேசன் சுப்பனைப்பற்றிக் கொண்டிருந்த சந்தேகத்தைப் பலப்படுத்தின. அவன் சுப்பன்தான் வியாபாரியைக் கொன்றிருக்க வேண்டும் என்று நிச்சயித்தான். சுந்தரேசன் உடனே அவ்விடம் விட்டு அகன்ருன்.

## V

## சுந்தரேசன் மனக்கலக்கம்

அன்று இரவெல்லாம் சுந்தரேசனுக்குத் தூக்கமில்லை. கடவுளை அடிக்கடி நினைத்தான்; வேண்டினுன். மனத்தில் அமைதி ஏற்படவில்லை. தான் பார்வதி புரத்தில் கவலையற்றுக்

காலங்கழித்ததும், சந்தைக்குப் புறப்பட்ட அன்று தன் மனைவி தடுத்ததும், வரும் வழியிலுள்ள விடுதியில் தான் கைது செய்யப்பட்டதும், சிறையில் மனைவி மக்களைச் சந்தித்ததும், கடைசியாக மனைவி சொன்ன வார்த்தைகளும், தான் கசையடி பட்டதும், இருபத்தாறு ஆண்டு சிறை வாழ்வும் ஒன்றன் பின் ஒன்ருக அவன் மனத்தில் தோன்றின. அவற்றை நினைக்க நினைக்க உலக வாழ்க்கையிலும் வெறுப்புண்டாயிற்று. அவன் தற்கொலை செய்துகொள்ள எண்ணினன்; "எல்லாம் அந்தப் பாவி சுப்பனலேயே நேர்ந்தன! அவனல் அல்லவா நான் இந்தக் கதிக்கு ஆளானேன்! அவனைப் பழிக்குப்பழி வாங்கியே தீரவேண்டும்!" என்று எண்ணினன். இரவு முழுவதும் இவ்வாறு கழிந்த போதிலும் அவன் மனக்கலக்கம் நீங்கவில்லை.

இவ்வாறு இரண்டு வாரங்கள் சென்றன. சுந்தரேசன் ஒரு நாள் தன் அறையில் ஏதோ நினைத்துக்கொண்டு இங்குமங்கும் உலாவிக் கொண்டிருந்தான். அப்பொழுது சுவரின் பக்கத்தில் பூமியின் அடியிலிருந்து மண் மேலே வந்து விழுந்துகொண்டிருப்பதைப் பார்த்தான்; சிறிது நேரத்திற்கெல்லாம் பூமியின் அடியிலிருந்து சுப்பன் மேலே வந்து தன் முன் நிற்பதைக் கண்டான். அவனைக் கண்டதும் சுந்தரேசனுக்குக் கோபமும் அச்சமும் உண்டாயின. அவன் வெறுப்புடன் மறுபக்கம் திரும்பிக்கொண்டான். ஆனல், சுப்பன்

அவன் கைகளை இறுகப் பற்றிக்கொண்டு, "நான்தான் இவ்விதம் மறு அறையிலிருந்து நிலவறை தோண்டி இங்கு வந்தேன்; இந்த வேலையை ஒருவரும் அறியாதபடி சில நாளாகச் செய்து வருகிறேன்; அன்றன்று தோண்டும் பொழுது உண்டாகும் மண்ணை என் உடையினுள் மறைத்து வைத்திருந்து வேலை செய்ய வெளியே செல்லுகையில் அதைக் கொட்டிவிடுகிறேன். கிழவரே, இதைப்பற்றி நீர் யாரிடமும் சொல்லலாகாது. ஏதாவது சொன்னீரோ, பார்த்துக்கொள்ளும்! இந்த உண்மை அதிகாரிகளுக்குத் தெரிந்தால் என் உயிரை வாங்கிவிடுவார்கள்! ஆனால், முதலில் உம்மை எமனுலகுக்கு அனுப்பிவிடுவேன் என்பது நினைவிருக்கட்டும்!" என்று சுந்தரேசனைப் பயமுறுத்தினான்.

சுந்தரேசன், "உன்னிடமிருந்து தப்பித்துக்கொள்ள எனக்கு எண்ணமில்லை. என்னைப் பல ஆண்டுகளுக்கு முன்பே நீ கொன்றுவிட்டதே! இனி என்ன என்னைக் கொல்லக்கிடக்கிறது? அதிகாரிகளிடம் நான் தெரிவிப்பதும், தெரிவியாமலிருப்பதும் என் விருப்பம். நான் கடவுள் இட்ட கட்டளைப்படி நடப்பேன்," என்றான்.

# VI

## பகைவனிடம் பரிவு

அடுத்த நாள் கைதிகள் வேலைக்கு வெளியே வந்த பொழுது, ஒரு சிப்பாய் கைதிகளில் ஒருவன் மண் கொட்டுவதைப் பார்த்து விட்டான். கைதிகளுடைய இருப்பிடத்தைச் சோதனை செய்தார்கள். நிலவறை தோண்டப்பட்டிருப்பதைக் கண்டார்கள். எல்லாக் கைதிகளையும் கூப்பிட்டு, 'இதைச் செய்தவன் யார்?' என்று அதிகாரி கேட்டார். எல்லாரும் தமக்குத் தெரியாதென்று சொல்லிவிட்டனர். சுப்பன் தான் செய்திருக்கிறுன் என்பதை அறிந்துங்கூட மற்றக் கைதிகள் சொல்ல முன் வரவில்லை. சொல்லியிருந்தால், அன்று அவனுக்குப் பெருந்துன்பந்தான்! கடைசியாக அதிகாரி சுந்தரேசனே உண்மையை உரைக்கக் கூடுமென்று நம்பி, "சுந்தரேசரே, நீர் மிகவும் நல்லவர்; உண்மையை உரைப்பவர். நடந்ததைச் சொல்லும்," என்று கேட்டார். சுப்பனே, தான் ஒன்றும் அறியாதவன் போல இருந்தான்.

சுந்தரேசனுக்குத் தான் இன்னது செய்ய வேண்டுமென்பது தெரியவில்லை. அவன் கைகளும் உதடுகளும் நடுங்கின. நெடுநேரம் அவனுல் பேசமுடியவில்லை. அவன் பின் வருமாறு எண்ணமிட்டான்: "என் வாழ்வைக் குலைத்தவனை, என் மனைவி மக்களை என்னிடமிருந்து பிரித்த கயவனை, எனக்குப் பெருந்

தீங்கு செய்த பாவியை, என்னை வீண் பழிக்கு ஆளாக்கிக் 'கொலையாளி' என்று உலகம் தூற் றும்படி செய்த தீயவனை நான் ஏன் தப்புவிக்க வேண்டும்! பழிக்குப் பழி வாங்க நல்ல தரு ணம் கிடைத்திருக்கிறது. நான் பட்ட துன்பம் கொஞ்சமா? அதற்கு இவனும் தகுந்த தண்ட னையை அடையட்டுமே! சீச்சீ! என்ன கெட்ட எண்ணம் என் மனத்தில் தோன்றுகிறது! நான் உண்மையை உரைத்தால்—ஐயோ பாவம்!—இவன் உயிரை வாங்கிவிடுவார்கள்! ஒருவேளை நான் நினைத்தபடி இவன் கொலைக் குற்றம் செய்யாதவனுயிருந்தாலோ, வீணில் ஒருவனைத் துன்பத்துக்கு ஆளாக்கினவனு வேன்! ஏற்கெனவே நான் முன்செய்த வினைக் குள்ள பயனை அனுபவித்தது போதாதா! இவனே வியாபாரியைக் கொன்றவனுய்த்தான் இருக்கட்டுமே! அதனுல் நான் இவனுக்குப் பதிலுக்குப் பதில் தீங்கு செய்தல் முறையா?

"தாந்தாமுன் செய்தவினை தாமே அனுபவிப்பார்
பூந்தா மரையோன் பொறிவழியே;—வேந்தே!
ஒறுத்தாரை யென்செயலாம்? ஊரெல்லாம் ஒன்ருய்
வெறுத்தாலும் போமோ விதி?"

என்ற பாட்டின்படி நாம் செய்த தீவினைப் பயனுல் இத்துன்பம் நேர்ந்ததென்று தேர்ந்து அமைதியுடனிருப்பதே அறிவுடைமை. இவன் அறியாமையாற்செய்த பிழைக்கு நாம் இவ னிடம் இரங்குவதே தகுதி. பகைவனிடத்தி லும் நாம் இரக்கத்தையே காட்ட வேண்டும்; பகைமை பாராட்டக் கூடாது. 'எல்லா உயிர்

களிடத்திலும் பகையில்லாதவனும், அவை களிடத்தில் நட்பு உள்ளவனும், யான் எனது என்ற இறுமாப்பு நீங்கினவனும், இன்ப துன்பங்களில் பொது நோக்கு வைப்பவனும், எப்பொழுதும் பொறுமையும் மகிழ்ச்சியும் உள்ளவனும், தன் உள்ளத்தையும் அறிவையும் என்னிடத்தில் நிலை நாட்டினவனும் எவனே, அவனே என் அன்பன்; அவனே எனக்கு விருப்பமானவன்,' என்று பகவான் கீதையில் அருளியிருப்பதை நான் வாசித்திருக்கிறேனே! எவ்வுயிரும் என் உயிர்போல் எண்ணி இரங்கவும் நின் தெய்வ அருட்கருணை செய்யாய் பராபரமே! கடவுளே, பகைவனிடமும் எனக்கு நட்பு ஏற்படும்படி அருள் செய்வாயாக!

'பகைவ னுக்கருள்வாய்—நன்னெஞ்சே!
பகைவ னுக்கருள்வாய்.
தின்ன வரும்புலி தன்னையு மன்பொடு
சிந்தையிற் போற்றிடுவாய்—நன்னெஞ்சே!
அன்னை பராசக்தி யவ்வுரு வாயினள்
அவளைக் கும்பிடுவாய்—நன்னெஞ்சே!'

என்ற பாரதியார் பாடலையும் நான் அடிக்கடி பாடியிருக்கிறேன். நான் என்ன வாசித்தும் என்ன பலன்? அனுபவந்தான் பெரிது. அதிலேதான் பேரின்பம் இருக்கிறது.

'இன்னுசெய் தாரை ஒறுத்தல், அவர் நாண
நன்னயஞ் செய்து விடல்.'

என்ற குறளை வாசித்திருக்கிறேன். அதன்படி நடக்க எனக்கு நல்ல தருணம் வாய்ந்திருக்

கிறது. ஆகையால், சுப்பனை நான் அதிகாரி களிடம் காட்டிக்கொடுக்கப் போவதில்லை,'' என்று தீர்மானித்தான்.

"என்ன! சுந்தரேசரே, ஏன் மௌன மாயிருக்கிறீர்? நிலவறையைத் தோண்டின வன் யாரென்பதைச் சொல்லும். நீர்தான் உண்மையைச் சொல்பவர்,'' என்று அதிகாரி சுந்தரேசனை மறுபடியும் கேட்டார். சுந்த ரேசன், "என்னால் இதைச் சொல்ல முடியாது. இது கடவுள் கட்டளை. நீங்கள் என்னை என்ன வேண்டுமானாலும் செய்துகொள்ளலாம்,'' என்றான். அதிகாரி எவ்வளவோ வற்புறுத்திக் கேட்ட போதிலும் சுந்தரேசன் ஒரே பிடிவாத மாக, தான் சொல்ல முடியாதென்று சொல்லி விட்டான்.

## VII
## உண்மை வெளிப்படல்

அன்றிரவு சுந்தரேசன் கண்ணயரப் போகும் நேரத்தில், யாரோ ஒருவன் அமைதி யாய் வந்து தன் படுக்கையில் உட்காருவதைக் கண்டான். சுந்தரேசன் வந்தவனை உற்றுப் பார்த்தான். சுப்பனே மறுபடி வந்திருந்தான். "இன்னும் என்ன செய்ய வேண்டுமென்கிறாய் அப்பா? மறுபடியும் நீ ஏன் இங்கு வந்தாய்?'' என்று கேட்க, சுப்பன் பதில் சொல்லவே இல்லை. சுந்தரேசன் எழுந்து உட்கார்ந்து கொண்டு, "நீ இவ்விடம் விட்டுப் போகிறாயா,

காவலாளியைக் கூப்பிடட்டுமா?'' என்று பய முறுத்தினான். அப்பொழுது சுப்பன், "செட்டி யாரவர்களே, நீங்கள் என்னை மன்னிக்க வேண்டும்!'' என்றான்.

சுந்தரேசன் : எதற்காக ?

**சுப்பன் :** அந்த வியாபாரியைக் கொன்று அந்தக் கத்தியை உங்கள் சாமான்களோடு வைத்த பாவி நானே! நான் பெரும்பாவி. நான் உங்களையும் கொல்ல நினைத்தேன். அதற்குள் யாரோ ஒருவர் வரும் சத்தம் கேட்டதால் கத்தியை உங்கள் மூட்டையில் ஒளித்து வைத்துவிட்டு ஜன்னல் வழியாக வெளியேறித் தப்பினேன்.

சுந்தரேசன், மௌனமாயிருந்தான்.

சுப்பன், "நான் செய்த குற்றம் என் மனத்தைப் பிளக்கிறது. நான் இப்பொழுதே அதிகாரிகளிடம் சென்று குற்றத்தை ஒப்புக் கொள்ளப் போகிறேன். நீங்கள் விடுதலை யடைந்துவீட்டிற்குப்போகலாம். அப்பொழுது தான் என் மனத்திற்குச் சிறிதாவது அமைதி ஏற்படும். உங்களுக்குச் செய்த தீங்குக்காக நீங்கள் எனக்கு என்ன தண்டனை விதித்தா லும் நான் அனுபவிக்கச் சித்தமாயிருக்கி றேன். என்னை மன்னித்து அருள் செய்யுங் கள்,'' என்று கண்ணீர் விட்டுக் கதறினான்.

சுந்தரேசன், "நான் இனி எங்குப் போவது ? இருபத்தாறு ஆண்டுகள் சிறையில் கழித்தாய்விட்டது. என் மனைவி இறந்திருக்க லாம். என் மக்களும் என்னை மறந்திருப்பார்

கள். எனக்கு இனி இச்சிறையைத் தவிரப் போக்கிடம் வேறு இல்லை,'' என்றான்.

சுப்பன் தன் இடத்தை விட்டு எழுந்திருக்கவில்லை. அவன் சுந்தரேசன் கால்கள் இரண்டையும் இறுகக் கட்டிக்கொண்டு, "நான் உங்களைப் பார்க்கும்பொழுதும், நான் செய்த பாவச் செயல்களை எண்ணும்பொழுதும் என் மனம் படும் வேதனைக்கு அளவில்லை. உங்களுடைய பெருந்தன்மை எங்கே, என்னுடைய அற்பக் குணம் எங்கே! நான் உங்களுடைய வாழ்வையே கெடுத்து உங்களுக்குப் பெருந்தீங்கு இழைத்திருந்தும், அதைப் பொருட்படுத்தாமல் நேற்று அதிகாரியிடம் என்னைக் காட்டிக் கொடாமல் காப்பாற்றிய உங்களுடைய தெய்விகக் குணத்தை நினைக்கையில் நான் அடையும் மன வேதனை பொறுக்கக் கூடியதன்று. ஆ! உங்களுடைய கருணையை என்னென்பேன்! பகைவனையும் நேசிக்கும் குணமுடைய உங்களை இவ்வளவு துன்பத்துக்கு ஆளாக்கினேனே! நான் பெரும்பாவி! மிகக் கொடியவன்! ஐயோ! ஐயோ!—செட்டியாரவர்களே, என்னை மன்னிக்கமாட்டீர்களா! உங்கள் வாயால் 'மன்னித்தேன்' என்று சொன்னால் உய்வேன்! எனக்கு வேறு கதியில்லை. என்னை மன்னியுங்கள்! மன்னியுங்கள்!'' என்று சிறு குழந்தை போல விம்மி விம்மி அழலானான்.

சுந்தரேசனுக்கும் அழுகை வந்துவிட்டது. "அப்பா, சுப்பா, உன்னைக்கடவுள் மன்

னிப்பார் ! வருந்தாதே. எழுந்திரு,'' என்ருன் சுந்தரேசன்.

சுந்தரேசன் மனத்திலிருந்து ஒரு பெரிய சுமை நீங்கினது போலத் தோன்றிற்று; அமைதி உண்டாயிற்று. வீடு போக வேண்டு மென்ற எண்ணம் இல்லை. சிறைச்சாலையை விட்டுப் போகவும் விரும்பவில்லை. கடவுளு டைய திருவடி நிழலில் சேர்ந்துகொள்ளும் நாளைத்தான் எதிர்பார்த்துக்கொண்டிருந் தான் சுந்தரேசன்.

சுந்தரேசன் எவ்வளவு சொல்லியும் கேளாமல் சுப்பன் அதிகாரிகளிடம் சென்று தான் அந்த வியாபாரியைக் கொன்று சுந்த ரேசன் மூட்டையில் கத்தியை மறைத்து வைத்ததை விரிவாக உரைத்து, சுந்தரேசன் குற்றமற்றவன் என்பதையும் விளக்கினுன்.

சுந்தரேசன் குற்றவாளி அல்லன் என் றும், அவனை உடனே விடுதலை செய்ய வேண் டும் என்றும் சிறை அதிகாரிக்கு உத்தரவு வந்தது. ஆனால், அதற்குள் சுந்தரேசன் மரணமடைந்தான் !

# 3. குடியே பாவத்தின் வித்து

## I

### சோற்று மூட்டை மறைதல்

ஏழைக் குடியானவன் ஒருவன் வைகறைப் பொழுதில் உழுவதற்காகத் தன் வயலுக்குப் புறப்பட்டான். திரும்பி வருவதற்கு நாழிகையாகுமென்று எண்ணி, அவன் மனைவி கட்டமுதைக் கட்டி அவனிடம் கொடுத்தாள். குடியானவன் வயலை அடைந்ததும் அருகிலுள்ள ஒரு மரத்தினடியில் கட்டமுதை வைத்து, அதன்மேல் தன் துணியை மூடினான்.

அவன் பதினொரு மணி வரை நிலத்தை உழுதுகொண்டிருந்தான். வெயில் அதிகரித்தது. அவனுக்குப் பசி மிகுந்தது. அவன் வேலை செய்ததால் உண்டான களைப்பைப் போக்கிக்கொள்ளச் 'சற்று இளைப்பாறுவோம்,' என்று மரத்தின் நிழலில் உட்கார்ந்தான்; தான் கொண்டு வந்த உணவை உட்கொண்டு பசியை ஆற்றிக்கொள்ள எண்ணிக் கட்டமுதை எடுக்கப் போனான். மூடியிருந்த துணியை நீக்கிப் பார்க்கையில் சோற்று மூட்டையைக் காணவில்லை.

“இதென்ன வேடிக்கையாய் இருக்கிறதே! இவ்விடத்தில் ஒருவரும் வரவில்லையே! அப்படியிருக்க, சோற்று மூட்டை காணாமற் போய்விட்டது! அது காணாமல் போன

காரணம் எனக்கு விளங்கவில்லையே!'' என்று அந்தக் குடியானவன் தானே சொல்லிக் கொண்டு ஆழ்ந்த சிந்தனையில் இருந்தான்.

கட்டுச் சோற்றை எடுத்து ஒளித்து வைத்தது ஒரு சாத்தான். அது அப்போது அங்கேயே மறைந்திருந்தது. மனிதர்களை நேர் வழியில் செல்லாதபடி தடுத்துத் தீநெறி யில் செல்லும்படி செய்யக் காப்புக் கட்டிக் கொண்டு வேலை செய்யும் இயல்புடையது சாத்தான். அது அன்பு, அருள், அடக்கம், பொறுமை, உண்மை முதலிய சிறந்த குணங் களைக் கிள்ளி எறிந்து, மனிதர்களிடையே தன் எண்ணத்தை நிலவச் செய்வதில் கண் ணுங்கருத்துமாயிருக்கும். மனிதர்கள் பாவப் படுகுழியில் விழும் பொழுது அதன் மனம் குளிரும். அந்தச் சாத்தான் தன் கீழுள்ள ஒரு குட்டிச் சாத்தானை அழைத்துக் குடியான வனைத் தீ நெறியில் புகச் செய்யக் கட்டளை யிட்டிருந்தது. அந்தக் குட்டிச் சாத்தான் செய்த சூழ்ச்சிதான் இது.

குடியானவன், "கட்டமுதோ போய்விட் டது. அதைப்பற்றி இனி வீணுக வருந்து வதாற்பயனில்லை. ஒரு வேளை பட்டினி கிடந் தால் என்ன குடி முழுகிவிடப்போகிறது! நான் இறந்தா போய்விடுவேன்! யாரோ பசித்தீ வருத்தியதால் அந்த உணவை எடுத்து உண்டிருக்கவேண்டும். அவர் வயிறு நிரம்பியதே எனக்குத் திருத்தி. இவ்வளவா வது என் கட்டமுது ஒருவருக்குப் பயன்பட்

டதே எனது நற்பேறு! 'உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர்' ஆவரல்லவா? இந்த அறம் செய்ய எனக்குக் கடவுள் அருள் இருந்தவாறு என்னே!" என்று சொல்லிக் கட்டமுது எடுத்தவரையும் வாயார வாழ்த்தினுன்; அருகிலிருந்த ஒரு கால்வாயில் சென்று தெள்ளிய நீரைப் பருகித் தன் களைப்பைத் தீர்த்துக்கொண்டான்.

## II

## சாத்தான் சீற்றம்

இதைப்பார்த்த குட்டிச்சாத்தான் நாணித் தலை கவிழ்ந்தது. 'கட்டமுதை எடுத்தவனைத் குடியானவன் கண்டபடி திட்டிச் சபிப்பான்; அதனுல் அவனைப் பாவப் படுகுழியில் தள்ளி விடலாம்,' என்று தான் எண்ணியது வீணுயிற்றே என்று அது வருத்தப்பட்டது; "நான் எதிர் பார்த்ததற்கு மாருகச் செயல் நடந்து விட்டதே! என் ஆற்றல் குடியானவனிடம் சாயவில்லையே! தலைவனிடம் என்ன சொல்லப் போகிறேன்!" என்று பலவாறு எண்ணிக் கவலை கொண்டு தன் தலைவனுன சாத்தானிடம் வந்து நின்றது. சாத்தான் முன்னிலையில் அது கைகட்டி வாய் புதைத்து நின்று, குடியானவனைத் தீ நெறியில் இழுக்கத் தான் செய்த சூழ்ச்சியையும், அது பலியாமற்போனதையும், குடியானவன் கட்டமுது எடுத்தவனை வாழ்த்தினதையும் விளக்கமாகச் சொன்னது.

இதைக் கேட்ட உடனே வந்துவிட்டது சினம் சாத்தானுக்கு! சாத்தான் முகம் சிவந்தது. அது தன் கண்களில் தீப்பொறி பறக்க, பற்களை நறநறவென்று கடித்து, "கையாலாகாத முழு முண்டமே, உன் ஆற்றல் குடியானவனிடம் பலிக்கவில்லையென்று என்னிடம் சொல்வதற்கு உனக்கு வெட்கம் இல்லையா? நீ வெற்றி பெருதது உன்குற்றமே அல்லவா? உன் வேலையை உனக்கு இன்னும் சரிவரச் செய்யத் தெரியவில்லை. இவ்வாறு குடியானவர்களையும் அவர்கள் மனைவிகளையும் நல்லொழுக்கத்தைப் பின் பற்ற விட்டு விடுவது, நமக்குக் கேடுதான். பின்பு நமக்கு என்ன வேலை? நம் ஆட்சி சிதைந்து போய் விடும். இவ்விதம் செயலை மிஞ்சவிடலாகாது. உடனே மறுபடி அங்கு நீ விரைந்து சென்று இதைச் செய்து முடி. உனக்கு மூன்று ஆண்டு தவணை கொடுக்கிறேன். இந்தக் குறித்த காலத்துக்குள் குடியானவனை மயக்கி உன் வலையில் சிக்க வைத்து அவனைப் பாவச் செயல்களைச் செய்ய நீ தூண்டினுல் ஆயிற்று! இல்லையேல், உன்னைத் தண்ணீரினுள் அமுக்கி எமனுலகத்துக்கு அனுப்பி விடுவேன்! பத்திரம்!" என்று கட்டளையிட்டது.

குட்டிச் சாத்தான் உடல் நடங்கிற்று. அது மறுபடியும் பூமிக்கு வந்து, எந்த விதத்தில் குடியானவனைத் தீய வழியில் புகுத்தலாமென்று எண்ணிப் பார்த்தது. ஒரு வழியும்

தென்படவில்லை. கடைசியாக ஏதோ ஓர் எண்ணம் அதன் மனத்தில் தோன்றியது. '' இதுவே வழி! இதுவே வழி! நம் செயல் நிச்சயம் வெற்றியளிக்கும்!'' என்று மிக்க மகிழ்ச்சியுடன் துள்ளிக் குதித்தது.

## III

## குட்டிச்சாத்தான் சூழ்ச்சி

பிறகு அது மனித வடிவங்கொண்டு குடியானவனிடம் ஒரு வேலையாளாய் அமர்ந்தது. பின்பு அது தன்னுடைய நடத்தையாலும், பேச்சுத் திறத்தாலும் குடியானவன் மனத்தைக் கவர்ந்தது. அவன் தன் வேலையாள் இட்டதே சட்டமாக எண்ணி நடந்தான். வேலையாளின் வார்த்தை அவனுக்கு வேதமாகவே இருந்தது. அவன் தூண்டியபடியே குடியானவன் நடந்து வந்தான்.

விதைக்கும் காலம் வந்தது. தண்ணீர் தேங்கியுள்ள பள்ளமான நிலத்தில் விதைக்கும்படி குட்டிச்சாத்தான் சொல்ல, குடியானவனும் மறு வார்த்தை சொல்லாமல் அவ்வாறே செய்தான். அவ்வாண்டில் பெரு மழையும் பெய்யவில்லை. வெயில் கடுமையாயிருந்தது. அதனால், அயலார் பயிரெல்லாம் தீய்ந்து பட்டுப் போயின. குடியானவனுடைய பயிர்கள் மட்டும் செழித்து வளர்ந்து நல்ல விளைவைக் கொடுத்தன. குடியானவன் தன் வேலையாளின் தூண்டுதலினாலேயே

தனக்கு இவ்வளவு நன்மை கிடைத்ததென்று எண்ணி மனம் பூரித்தான்; வேலையாளைப் புகழ்ந்தான்.

அடுத்த ஆண்டு மேட்டு நிலத்தில் பயிரிடும்படி வேலையாள் குடியானவனைத் தூண்டினான். அந்த ஆண்டில் மழை மிக அதிகமாய்ப் பெய்தது. எங்கே பார்த்தாலும் வெள்ளக் காடாயிற்று. மற்றவர்களின் வயல்களில் மழைத் தண்ணீர் தேங்கிவிடவே, அவர்கள் பயிர்களெல்லாம் அழுகிக் கெட்டுப் போயின. குடியானவனுடைய பயிர் செழித்து வளர்ந்து நல்ல பலனைக் கொடுத்தது.

இவ்விதம் ஏராளமான பலனை அடைந்த குடியானவனுக்கு, இன்னது செய்வதென்பது தெரியவில்லை. தன் தேவைக்கு வேண்டியதைக்காட்டிலும் மிகமிக அதிகமாக நெல் மிஞ்சியிருந்தது. அவன் தன் வேலையாளிடம், "இவ்விதம் மிஞ்சின நெல்லைக்கொண்டு நாம் என்ன செய்யலாம்?" என்று ஆலோசனை கேட்டான். அப்பொழுது வேலையாளாகிய குட்டிப்பேய், "ஐயா, நாம் இந்த நெல்லிலிருந்து ஒரு வித இனிய குடிநீர் இறக்கலாம். அதைக் குடித்தால் அது உங்களைக் களிப்புக் கடலில் ஆழ்த்திவிடும்!" என்று சொல்லிற்று. அவனும் அதன் கற்பனைப்படியே செய்தான்; இவ்வாறு இறக்கின மதுவைத் தானும் தாராளமாக உட்கொண்டு, தன் மனைவிக்கும் கொடுத்து வந்தான். விரைவில் அவன் பக்காக் குடிகாரனாய்விட்டான்.

குட்டிப்பேய், தன் எண்ணம் பலித்த தைக் கண்டு களித்துத் தன் தலைவனாகிய சாத்தானிடம் சென்று குடியானவனைப் படு குழியில் தள்ளிய விதத்தை அறிவித்துப் பெருமை கொண்டது. சாத்தான், "உன் பேரில் எனக்கு நம்பிக்கை இல்லை. நேரில் பார்த்துதான் நான் உண்மையை அறிய வேண்டும்," என்று பதில் சொல்ல, இரண்டும் குடியானவன் வீட்டிற்கு வந்து சேர்ந்தன.

## IV

## குடியால் விளைந்த குழப்பம்

குடியானவன் தன் நண்பர்களுடன் உட் கார்ந்திருந்தான். நடுவில் ஒரு மேசை இடப் பட்டிருந்தது. அதன்மேல் பல குவளைகளும், மது நிறைந்த மிடாக்களும் இருந்தன. குடி யானவன் குவளைகளில் மதுவை முகந்து நண் பர்களுக்கும் கொடுத்துத் தானும் குடித்துக் கொண்டிருந்தான். அவன் மனைவி இன்னும் ஒரு குவளையில் மதுக் கொண்டு வருகையில் மேசைமேல் இடறி விழுந்துவிட்டாள். அவள் கொண்டு வந்த மது முழுவதும் தரையில் ஓடி வீணாயிற்று.

அப்பொழுது குடியானவன் மிகுந்த சினங்கொண்டான்; "அறிவு கெட்ட மூதேவி, இது என்ன! வாய்க்கால் நீரென எண்ணி னாயா, இம்மாதிரி கீழே கொட்டுவதற்கு?"

என்று சொல்லிக்கொண்டே கண்கள் சிவந்து அவனை ஓர் அறை அறைந்தான்.

அப்பொழுது குட்டிப்பேய், தன் தலைவனைத் தன் தோளால் இடித்து, கண்களைச் சிமிட்டிக்கொண்டு, "பார்த்தீர்களா! இவனுடைய இயல்பு முழுதும் மாறிவிட்டதைப் பார்த்தீர்களா! தன்னுடைய கட்டுச்சோறு போனதைப் பற்றி மனம் வருந்தாமல் அதைத் திருடினவனை மனமார வாழ்த்திய நல்லோன் இந்தப் பேர்வழிதான்!" என்றது.

குடியானவனும் அவனுடைய நண்பர்களும் குடித்து மகிழ்ந்திருக்கையில் அங்கு வேறொரு குடியானவன் வந்தான். அவன் வேலை செய்து களைத்திருந்தான்; தன்னை ஒருவரும் வரவேற்காவிட்டாலும், தானே உள்ளே நுழைந்தான். அவனை அங்கு ஒருவரும் ஏறிட்டுப் பார்க்கவில்லை. ஆனால், அவனோ, அசட்டுச் சிரிப்புச் சிரித்துக்கொண்டே அவர்களருகில் அமர்ந்தான். எல்லாரும் குடிப்பதைக் காண அவன் நாக்கிலும் நீர் ஊறிற்று. அவன் தானும் சிறிது குடித்துத் தனது களைப்பைப் போக்கிக்கொள்ள எண்ணினான். ஆனால், யாராவது அவனுக்குக் கொடுத்தால்தானே! அவன் உட்கார்ந்து பார்த்தான். அவனை ஒருவரும் பொருட்படுத்தவில்லை. 'ஆசை வெட்கமறியாது,' அல்லவா? அவன் தனக்கும் கொஞ்சம் மதுத் தரும்படி குடியானவனை வாய்விட்டே கேட்டுவிட்டான். "என்னடா! இது சத்திரமென்று

எண்ணினுயா? அல்லது இது என்ன தண்ணீர்ப்பந்தலா? வருகிற போகிற நாய்களுக்கெல்லாம் மதுவைக் கொடுக்கவா இங்கு நான் இருக்கிறேன்! சீ! வெட்கங்கெட்ட நாயே, போ வெளியே! பதரே,'' என்று பலவாறு திட்டி அவனை அனுப்பிவிட்டான் குடியானவன்.

அப்பொழுது சாத்தான் மனங்குளிர்ந்தது. அது மட்டற்ற மகிழ்ச்சி கொண்டது; குட்டிப்பேயின் கையை அழுத்தி ஒரு குலுக்குக் குலுக்கிற்று; அதன் தோளைத் தட்டிக் கொடுத்தது; அதைக் களிப்புடன் தழுவிக் கொண்டது. "நன்று நன்று! என் வயிற்றில் பாலை வார்த்தாயடா என் கண்ணே! பயலை ஒழுங்கான வழிக்குத் திருப்பிக் கொண்டுவந்துவிட்டாய் அப்பா! உன் திறமையை மெச்சினேன்!'' என்று சொல்லித் தன் மகிழ்ச்சியைக் காட்டிக்கொண்டது பெரிய சாத்தான்.

"எல்லாம் உங்கள் அருளாலேதான் நிகழ்கின்றன. நீங்கள் பதருதீர்கள். இனிமேலேதான் நாடகம் தொடங்கப்போகிறது! சுவையான காட்சிகள் இனி வரும். சற்றுப் பொறுத்திருந்து இன்பத்தைக் கொடுக்கும் பல காட்சிகளையும் கண்டு மகிழுங்கள்!'' என்றது சின்னப்பேய்.

குடியானவர்கள் குடி வெறியினுல் குழப்பம் செய்தார்கள். பேச்சும் வலுத்தது. அவர்கள் கண் பார்வையும் அஞ்சத்தக்கதாய்

இருந்தது. அவர்கள் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டது நரிகளின் பார்வையைப் போன்றிருந்தது. "என் அன்பனே, இவர்களுடைய பார்வை நரிப்பார்வை போலத் திருட்டுத் தனமுள்ளதாய் அல்லவா இருக்கிறது? விரைவில் இவர்கள் ஒருவரையொருவர் வஞ்சிக்க முயல்வார்கள். வஞ்சக எண்ணம் இவர்களிடம் குடிகொண்டாய்விட்டது. விதையை நன்ருய் ஊன்றிவிட்டாய்! அது முளைத்துவிட்டது! இவர்கள் நம் வலையில் சிக்கிவிட்டார்கள்! இனி நமக்குக் கவலையில்லை!" என்று பெரிய சாத்தான் குட்டிச் சாத்தானிடம் சொல்லி அதன் ஆற்றலைப் பலவாறு புகழ்ந்தது.

"என்ன! நீங்கள் இவ்வளவு அவசரப்படலாமோ? இன்னும் ஒரு குவளை மதுவை இவர்கள் உள்ளே விட்ட பிற்பாடு பாருங்கள் இவர்கள் செய்யும் குழப்பத்தை! அது ஓர் அரிய காட்சியாகும்! அக்காட்சியைப் பார்க்கப் பதினுயிரம் கண்கள் வேண்டும்! இப்பொழுது இவர்கள் நரிகளைப் போல ஒருவரை ஒருவர் தாக்க முயற்சி செய்கிருர்கள். இன்னும் சில நாழிகையில் ஓநாய்களாய், ஒருவரோடொருவர் சண்டை செய்யும் காட்சியை நமக்கு அளிப்பார்கள்!" என்றது சின்னப் பேய்.

எல்லாக் குடியானவர்களும் இன்னும் ஒரு குவளை மதுவை உள்ளே விட்டார்கள். காட்சி தொடங்கிவிட்டது. ஒருவரை ஒருவர் திட்டிக்

கொள்ள ஆரம்பித்தனர். அவர்கள் சொன்ன வார்த்தைகளை இங்கு எழுதுதல் இயலாது. பல்லை நறநறவென்று கடித்துக்கொண்டு ஒருவரையொருவர் தாக்கலாயினர். சண்டை தொடங்கிவிட்டது. ஒருவர் மூக்கை ஒருவர் கடித்தனர். இந்தக் கலவரத்தில் நம் கதைத் தலைவனான குடியானவனும் கலந்துகொண்டான் என்பதைச் சொல்லவும் வேண்டுமா! அவனுக்கும் அடிகளும் உதைகளும் கிடைத்தன.

இந்தக் காட்சி சாத்தானைக் களிப்புக் கடலில் ஆழ்த்திவிட்டது. இந்த இன்பத்தில் மூழ்கிச் சிறிது நேரம் மெய்ம்மறந்திருந்து, "என் அருமைக் குட்டிப்பேயே, நீ செய்த செயல் முதல் தரமானது!" என்று சொல்லி அதை மெச்சித் தன் மார்பில் தழுவிக்கொண்டது சாத்தான். "சிறிது நேரம் பொறுங்கள்! இந்த நாடகத்தில் தேனினும் இனிய மிக இனிய காட்சி இனித்தான் வரப்போகிறது! இன்னும் ஒரு குவளை மதுவை இவர்கள் குடித்துப் பன்றிகள் போல உறுமுவதை நீங்கள் பார்ப்பீர்கள்!" என்று குட்டிப்பேய் சொல்லிற்று.

குடியானவர்கள் இன்னும் ஒரு குவளை மதுவை அருந்தினார்கள்; காட்டு மிராண்டிகள்போல நடக்கத் தொடங்கினார்கள்; பேசத் தகாத பேச்சுகளைப் பேசினார்கள்; வீணாகக் கூக்குரல் இட்டார்கள். வீடு முழுவதும் ஒரே இரைச்சலும் குழப்பமும் நிரப்பின. பின்பு

அவர்கள் ஒவ்வொருவராக வெளிக்கிளம்பினுர் கள். அவர்கள் நடை தள்ளாடிற்று. கல்லில் மோதிக்கொண்டு விழுந்தனர் சிலர். நடக்க முடியாமல் கீழே தள்ளாடி விழுந்து உணர்ச்சி யற்றுக் கட்டை போலச் சிலர் கிடந்தனர். நம் முடைய கதைத் தலேவனும் விருந்தினரை வழி அனுப்ப வருகையில் சேறுள்ள ஒரு குட்டை யில் விழுந்தான்; தன் உடல் முழுவதும்சேருகி அதிலிருந்து எழுந்திருக்க முடியாமல், பிணம் போலக் கிடந்தான்.

இந்தக் காட்சியினுல் ஏற்பட்ட மகிழ்ச்சி யால் சாத்தாஞல் பேசக்கூட இயலவில்லே. "நீ கை தேர்ந்த பேர்வழி! உன்னிடம் இவ் வளவு சரக்கு இருக்குமென்று நான் இதுவரை எண்ணவில்லே! நீ முன் செய்த தவறுகளுக் கெல்லாம் இது கழுவாயாயிற்று. முதல் தர மான மதுவை நீ இவர்களுக்குக் கொடுத்திருக் கிருய். இதிலுள்ள மருமம் எனக்கு நன்ருய் விளங்கிவிட்டது! முதலாவது நீ நரியின் இரத்தத்தை இந்த மதுவில் சேர்த்திருக்க வேண்டும்! அதனுலேதான் இவர்கள் நரி போலத் திருட்டு விழி விழித்தார்கள். உண்டா, இல்லேயா? பின்னர் ஓநாயின் இரத் தத்தைச் சேர்த்துக்கொடுத்திருக்கவேண்டும். இவ்வாறு செய்து இவர்களேப் பன்றிகளேப் போல நடந்துகொள்ளும்படி செய்து உன் எண்ணத்தை நிறைவேற்றிவிட்டாய்! நான் கருதியது சரிதானே?" என்று சாத்தான் குட்டிப்பேயிடம் கேட்டது.

அப்பொழுது குட்டிப்பேய், “நான் செய்தது அதுவன்று. நான் செய்ததெல்லாம், குடியானவன் தன் தேவைக்கு அதிகமான நெல்லை அடையும்படி செய்ததேயாகும். மனிதன் தன் பகுத்தறிவைப் பயன்படுத்தவில்லையானால் அவனுக்கும் விலங்குக்கும் யாதொரு வேறுபாடும் இல்லை. சரியானபடி மனம் பண்படாத மனிதனிடம் விலங்கின் இயல்பு இயற்கையிலேயே இருக்கிறது. தன் தேவைக்குப் போதுமான மட்டும் உணவுப் பொருள் இருக்கும் வரை, அவனிடம் உள்ள இந்த விலங்கின் இயல்பு தலை எடுப்பதில்லை; அடங்கிக் கிடக்கும். இந்த நிலைமையிலே தான் தன் கட்டுச் சாதம் காணமற்போனதைப் பற்றிக் குடியானவன் மனவருத்தப்படவில்லை; அதைத் திருடினவனைக் கோபிக்கவும் இல்லை; திட்டவும் இல்லை; அவனை வாழ்த்தினான். ஆனால், தன் தேவையின் அளவுக்கு மிஞ்சின உணவுப் பொருள் கிடைத்ததும், ‘இதைக் கொண்டு எவ்விதத்தில் இன்பமடையலாம்? அதற்குரிய வழிகள் எவை?’ என்று சிந்திக்கத் தொடங்கினான். அப்பொழுதுதான் நான் அவனுக்கு இன்பமடையும் வழியைக் காட்டினேன். **அதுதான் குடிப்பழக்கம்.** கடவுளால் அருளப்பட்ட நல்ல உணவுகளை மதுவாக மாற்றிக் குடிக்கத் தொடங்கியதும் அவனிடம் அடங்கியிருந்த தீயகுணம் தலை காட்டத் தொடங்கியது. இன்னும் விடாது குடித்துக்கொண்டிருப்பானு

ஞல், அவன் விலங்குதான். இதில் ஐயமே வேண்டா,'' என்றது.

“மனிதனைப் பாவ வழியில் இழுத்துப் படுநரகத்தில் தள்ளுவதற்கு நீ கண்டு பிடித்த குடிப் பழக்கமே மிகச் சிறந்தது! குடியே பாவத்துக்கு வித்து. ஐம்பெரும்பாவங்களுக்கும் இதுவே அடிப்படை. இந்த ஒன்றையே நாம் கருவியாகக் கொண்டு மனிதர்களிடமுள்ள தெய்வத்தன்மையை ஒழித்து நம் வசப் படுத்திப் பாவ வடிவமாக அவர்களை மாற்றி விடலாம். இவ்வளவு சிறந்த வழியைக் கண்டு பிடித்த உனக்கு நான் என்ன கைம்மாறு செய்யப்போகிறேன்! நீயே எனக்கு இனி முதல் மந்திரி! நீ முன் செய்த தவறுகளை யெல்லாம் மன்னித்தேன்! உனக்குப் பல விதப் பரிசுகளை அளிக்கவும் ஆயத்தமாயிருக்கிறேன். நம் ஆட்சியை வலுப்படுத்தி நம் குடிமக்கள் தழைத்தோங்கச் செய்ய மனிதர்களிடை இந்தக் குடியைப் பரவச் செய்ய வேண்டும். அந்தச் செயலைக் கண்ணுங் கருத்துமாயிருந்து கவனிக்க வேண்டும்!'' என்று பெரிய பேய் சொல்லிக் குட்டிப் பேயைப் பெரிதும் புகழ்ந்தது.

# 4. அரிய நெல் மணி

## I

### வியத்தகு பொருள்

ஒரு நாள் மாலைப்பொழுதில் சில சிறுவர்கள் ஆற்று மணலில் மிக்க மகிழ்ச்சியுடன் விளையாடிக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது மணலில் புதைந்திருந்த ஏதோ ஒரு பொருள் அவர்களுள் ஒருவன் கண்ணுக்குப் புலப்பட்டது. அது பார்ப்பதற்கு ஒரு நெல் மணி போன்று இருந்தது. ஆனால், அது ஒரு கோழி முட்டையின் அளவு இருந்தது. அதை அந்தப் பையன் எடுத்துத் தன் நண்பர்களுக்குக் காட்ட, அவர்கள் அதைப் பார்த்து வியந்துகொண்டிருந்தார்கள்.

அப்போது வழிப்போக்கன் ஒருவன் அவ்வழியே வந்தான். சிறுவர்கள் பார்த்து வியந்துகொண்டிருக்கும் பொருளை அவன் பார்த்ததும் அதைப் பெற விரும்பினான்; பையனிடம் நாலணாவைக் கொடுத்து அந்த அரிய பொருளை வாங்கிக்கொண்டான். பின்பு அவன் அதை அரசனிடம் சேர்ப்பித்தான். அரசனும் அவனுக்குத் தகுந்த பரிசை அளித்தான்.

அப்பொருளைப் பார்த்ததும் அரசனுக்கு மிகுந்த வியப்பு உண்டாயிற்று. "இது பார்ப்பதற்கு ஒரு நெல் மணி போன்றிருக்கிறது!

ஆனால், கோழி முட்டையளவு இருக்கிறதே! இவ்வளவு பருமனுள்ள நெல் மணி உண்டா! இது விந்தையாகவன்றோ இருக்கிறது! இது என்ன பொருளாயிருக்கலாம்!'' என்று அரசன் அதைப்பற்றிப் பலவாறு நினைக்கலானான்; தன் அவைப் புலவர்களை வரவழைத்து அவர்களிடம் அந்தப் பொருளைக் கொடுத்து, அது யாதெனக் கண்டறிந்து சொல்லுமாறு கட்டளையிட்டான்.

அவர்கள் எவ்வளவோ முயன்றும் அது இன்னதென அவர்களால் அறிய முடியவில்லை. ஒரு நாள் அப்பொருளை ஒரு குருவி கொத்தியது. உடனே புலவர்கள் அரசனிடம் சென்று, "இவ்வளவு பருமனுள்ள பொருள் நெல்லேதான்,'' என்று அறிவித்தார்கள்.

இதைக் கேட்டதும் அரசன் கொண்ட வியப்புக்கு அளவில்லை. "இவ்வளவு பருமனுள்ள நெல்லை நான் இது வரையில் பார்த்ததில்லை! இது புதுமையிலும் புதுமையாகவன்றோ இருக்கிறது! இவ்வித நெல் எந்தக் காலத்தில், எங்குப் பயிர் செய்யப்பட்டது என்பதை ஆராய்ச்சி செய்து அறிந்து எனக்குத் தெரிவிக்க வேண்டும்,'' என்று புலவர்களுக்கு உத்தரவிட்டான்.

அவர்களும் பல நாட்டு வரலாறு, புராணங்கள் முதலிய நூல்களைப் புரட்டிப் புரட்டிப் பார்த்தார்கள். அவற்றுள் ஒன்றிலும் அதைக் குறித்து ஒன்றும் எழுதப்படவில்லை. பின்பு அவர்கள் அரசனிடம் சென்று, "இதை

எங்களால் அறியக் கூடவில்லை. நூல்களி லின்றும் இது புலனாகவில்லை. இந்தச் செய்தி யைப் பயிர் செய்யும் குடியானவர்களைக் கேட் டால் தெரியலாம். அவர்கள் தங்கள் முன் னோரிடமிருந்து இதை அறிந்திருக்கலாம்,'' என்று சொன்னார்கள். அரசன் உடனே ஒரு கிழக் குடியானவனை அழைத்து வரும்படி கட்டளையிட்டான். அவனுடைய வேலைக்காரர் கள் அவ்வாறே செய்தார்கள்.

## II

## கிழவனை வினாதல்

அழைத்து வரப்பட்டவன் ஒரு தொண்டு கிழவன். அவன் முதுகு கூனல் அடைந் திருந்தது; தோலில் சுருக்கங்கள் காணப் பட்டன. இரண்டு ஊன்று கோல்களின் உதவி யைக் கொண்டுதான் அவனால் நடக்க முடிந் தது. அரசன் முன்னிலையில் அந்தக் கிழவனைக் கொண்டு வந்து நிறுத்தினார்கள்.

அரசன் அந்தப் பொருளைக் கிழவனிடம் காட்டி, "இது போன்ற பொருளை நீர் பார்த் திருக்கிறீரா?'' என்று வினவினான்.

கிழவனோ, பார்வை இழந்த குருடன். அவனுக்குக் காதோ, கேட்கவில்லை. அவன் பற்களையிழந்த பொக்கை வாய்க் கிழவன். அவன் அந்தப் பொருளை அரசனிடமிருந்து வாங்கித் தன் கையால் தடவிப் பார்த்தான்.

"கிழவரே, இது போன்ற நெல் எந்த

இடத்திலாவது விளைந்ததை நீர் கேட்டிருக்கிறீரா ? அல்லது பார்த்திருக்கிறீரா ! இவ்வித நெல்லை நீர் உமது வயலில் பயிர் செய்தது உண்டா ? எப்பொழுதாவது இது போன்ற நெல்லை விலைக்கு வாங்கியிருக்கிறீரா ?'' என்றெல்லாம் அரசன் கிழவனைக் கேட்டான்.

கிழவனோ, முழுச் செவிடன். அவன் பேச்சும் தெளிவாய் இல்லை ; மிக முயன்றே அரசன் அவன் விடையை அறிய முடிந்தது. ''நான் இப்படிப்பட்ட நெல்லை இது வரை பார்த்ததும் இல்லை. என் காலத்திலும் நெல் இப்பொழுது இருப்பது போலச் சிறியதாகத் தானிருந்தது. ஒருவேளை என் தகப்பனுருக்கு இதைப் பற்றித் தெரிந்திருக்கலாம். அவரைக் கூப்பிட்டுக் கேட்டால் எந்தக் காலத்தில் இவ்வித நெல் விளைந்தது என்பதை அறிந்து கொள்ளலாம்,'' என்று கிழவன் சொன்னன்.

## III
## தந்தையார் அறிந்திருக்கலாம்

அப்படியே அரசன் அவன் தகப்பனை வரவழைத்தான். அவன் அவ்வளவு கிழத்தன்மை வாய்ந்தவனுகத் தோன்றவில்லை. அவன் பார்வை இன்னும் கூர்மையாகவே இருந்தது. அரசன் நெல்லை அவனிடம் கொடுத்ததும் அவன் அதை நன்ருய் உற்றுப் பார்த்தான்.

''இம்மாதிரி நெல் எங்கு விளைந்தது என்பது உமக்குத் தெரியுமா? இது போன்



றதை நீர் விலைக்கு வாங்கியதுண்டா? உம் வயலில் நீர் இது போன்ற நெல்லைப் பயிர் செய்திருக்கிறீரா?" என்று அரசன் கிழவனைக் கேட்டான்.

கிழவன், "அரசரே, இவ்வளவு பெரிய நெல்லை நான் இது வரை பார்த்ததே இல்லை. எங்கள் காலத்தில் நெல்லை விற்பதும் வாங்கு வதும் இல்லை. நாணயப் பழக்கமும் எங்கள் காலத்தில் இல்லை. ஒவ்வொருவனும் பயிர் செய்து அவன் அவனுக்குப் போதுமான நெல்லை அடைந்தான். யாருக்காவது நெல் இல்லாவிட்டால், நாங்கள் கொடுத்து உதவி னேம். உணவுப் பஞ்சம் என்பது எங்கள் காலத்தில் இல்லை. ஆனல், இவ்வளவு பரும னுள்ள நெல்லை நாங்கள் விதைத்து அறுவடை செய்ததில்லை. எங்கள் காலத்தில் நெல் இப் பொழுதுள்ளதைக்காட்டிலும் மிகவும் திரட்சி யுள்ளதாயும், மிகுந்த மாவு உள்ளதாயும் இருந்தது. நீங்கள் வைத்திருப்பது போன்ற நெல்லை நான் ஒரு பொழுதும் பார்த்ததில்லை. ஆனல், என் தகப்பனர் காலத்தில் மிகவும் பருமனுள்ள நெல் விளைந்ததை அவர் சொல்ல நான் கேட்டிருக்கிறேன். அவரைக் கேட்டால் இதைப் பற்றித் தெளிவாக அறிந்து கொள்ளலாம்," என்று விடையளித்தான்.

# IV
# முதியோன் தந்த விளக்கம்

அவ்வாறே அவன் தகப்பனை வரவழைத் தார்கள். அவன் தன் மைந்தன், பேரன் முத லியவர்களைப் போல அல்லாமல் மிகுந்த உடல் நலமுள்ளவனும், வலியவனும் இருந்தான். அவர்களைப் போல அவன் நடை தள்ளாட வில்லை. சிறிதும் சோர்வு இல்லாமலும், ஒரு வர் உதவியில்லாமலும் அவன் தானுகவே நடந்து வந்தான். அவன் கண் பார்வையும் மங்கவில்லை; காதும் நன்ருய்க் கேட்டது; பற்க ளெல்லாம் உறுதியாகவேயிருந்தன; அவன் பேசிய பேச்சும் தெளிவாகவே இருந்தது.

அரசன் அந்த நெல்லைக் கிழவன் கையில் கொடுத்ததும் அவன் அதைப் புரட்டிப் புரட் டிக் கூர்மையாகப் பார்த்தான். அவன் முகத் தில் புன்சிரிப்புத் தவழ்ந்தது. அவன், "நான் இம்மாதிரி நெல்லைக் கண்டு பல ஆண்டுக ளாயின!" என்று சொல்லிக்கொண்டே அந்த நெல்லில் சிறிது கடித்துச் சுவைத்துப் பார்த் தான். "சரி; ஐயமேயில்லை; இது அதே நெல்லுதான். சுவையும் அவ்விதமே இருக் கிறது," என்ருன்.

அரசன், "பெரியவரே, இம்மாதிரி நெல்லை எந்தக்காலத்தில் பயிரிட்டிருக்கிருர்கள்? எந்த இடங்களில் இது போன்ற நெல் விளைந்தது? உமக்குத் தெரியுமா?" என்ருன்.

**கிழவன் :** என் இளமைப் பருவத்தில் இவ்வளவு திரட்சியுள்ள நெல்லே விளைந்தது. சாப்பாட்டிற்கு இவ்வித நெல்லைத்தான் பயன் படுத்தினோம். நாடு முழுவதும் விளைந்தது இத்தகைய நெல்லே.

**அரசன் :** உமக்கு வேண்டிய நெல் முழுவதையும் நீரே பயிர் செய்துகொண்டீரா, அல்லது விலைக்கு வாங்கினீரா? அப்படியானால் எங்கே வாங்கினீர்?

**கிழவன் :** அரசரே, உணவுப் பொருளை விற்பதும் வாங்குவதும் எங்கள் காலத்தில் நடந்ததில்லை. நாங்கள் அதைப் பெரும்பாவமெனக் கருதி வந்தோம். பட்டினியால் ஒருவன் இறந்தான் என்பது எங்கள் காலத்தில் இல்லை. ஒவ்வொருவருக்கும் தேவையான உணவுப் பொருள் இருந்தது. வேலை செய்யத் தகுதியற்றவர்களுக்கு நாங்கள் உணவுப் பொருளைக் கொடுத்து உதவினோம். நாணயங்களை நாங்கள் கண்டது இல்லை.

" இனியொரு விதிசெய்வோம்—அதை
எந்த நாளும்காப்போம் ;
தனியொருவனுக் குணவில்லையெனில்
சகத்தினை அழித்திடுவோம் !"

என்று இக்காலத்தில் ஒரு கவிஞர் பாடியிருக்கிறாரே—அது எங்கள் காலத்தில் பழக்கத்தில் இருந்தது.

**அரசன் :** நீர் பயிர் செய்து வந்த வயல் எங்கே? இவ்வித நெல்லை நீர் பயிர் செய்த இடத்தைக்காண எனக்கு ஆவலாயிருக்கிறது!

அரசன் இவ்வாறு கூறியதும் கிழவன் சிரித்து, " அரசரே, கடவுள் படைத்த நிலமே என் வயல். இராமன் இருந்த இடம் அயோத்தி என்பார்களே, அது போல இவ்வகன்ற நில வுலகில் எந்த இடத்தைத் திருத்தி உழுது பயிர் செய்கிறேனே, அதுதான் என் வயல். அப்போது நிலம் யாவருக்கும் பொது. இந் தக் காலத்தில் சிலர் வரப்புகளைப் போட்டு எல்லை கட்டி, 'என்வயல்' 'உன்வயல்' என்று உரிமை கொண்டாடி, கடவுளால் எல்லாருக் கும் பொதுவாக அளிக்கப்பட்ட நிலத்தைக் கவர்ந்துகொள்ள, பெரும்பான்மையான மக் கள் உழைத்து உண்பதற்குக்கூட நிலம் இல் லாமல் தத்தளித்துத் திண்டாடுவது எங்கள் காலத்தில் இல்லை. 'எனக்கு இத்தனை ஏக்கர் நிலம்', ' நான் இவ்வளவு சொத்துக்காரன் ' என்பன எல்லாம் இக்காலத்தில் ஏற்பட்டவை களே. உழுது விதைத்து அறுப்பவனுக்கு உணவு உண்டு. ஒருவனுடைய உழைப்புத் தான் அவனுக்குச் சொத்து. நிலத்தைச் சிலர் மட்டும் பகிர்ந்துகொண்டு பயனடைவது எங்கள் காலத்தில் வழக்கமில்லை," என்றான்.

அரசன், "உம்மை இன்னும் சில கேள்வி கள் கேட்க நான் விரும்புகிறேன். உங்கள் காலத்தில் நெல் இவ்வளவு திரட்சியாய் விளைந்ததற்கும், இக்காலத்தில் அது மிகக் குன்றியிருப்பதற்கும் காரணம் என்ன? உம் முடைய மைந்தன், பேரன்மார்களைக்காட்டி லும் நீர் மிக வலியவராயும், உடல் நலம்

உள்ளவராயும் இருப்பானேன் ?'' என்று கேட்டான்.

கிழவன், ''இதற்குக் காரணம் மனிதன் தெய்வக் கட்டளையை மீறி நடந்ததுதான். மனிதர் ஒருவரையொருவர் வஞ்சித்து வருகின்றனர். கடவுளால் படைக்கப்பட்ட நிலம் தமக்குத்தான் சொந்தமென்று சிலர் உரிமை கொண்டாடுகின்றனர். அந்த உரிமை இல்லாத மனிதர் அந்த நிலத்தைப் பண்படுத்தி உழுது பயிர் செய்து அறுவடை செய்து, விளைவை அந்த நிலத்துக்கு உரிமையாளர்களிடத்தில் கொண்டு போய்ச் சேர்க்க வேண்டுமாம். நெற்றி வியர்வை நிலத்தில் விழப் பாடுபட்டு அதனால் உண்டான பலனை முழுச் சோம்பேறியான அந்த 'நிலக்கிழான்' பயன் படுத்துகிறான். உழைப்பாளி தன் மனைவிமக்களுக்கு உண்ண உணவும், உடுக்க உடையும், இருக்க இடமும் போதுமான அளவு இல்லாமல் அவதிப்பட, நிலச் சொந்தக்காரன் என்று சொல்லிக்கொள்ளும் மனிதன் எல்லா நலங்களையும் துய்க்கிறான். இவ்விதம் உழைப்பவன் ஒருவன், பயனடைபவன் இன்னொருவன். அந்த ஏழைகள் அழும் கண்ணீர் வெறுமண்ணில் கலந்திடுமா ? கடவுளுக்கு இச்செய்கை விருப்பந்தருமா ? எல்லாரும் அவருடைய மக்களல்லவா ? நாட்டில் எத்தனை கோடி மக்கள் இராப் பட்டினியும் பகற்கொட்டாவியுமுடையவர்களாய் இருக்கிறார்கள் ! இருக்க வீடில்லாமல் வெட்ட வெளிகளில் இருப்பவர்

எத்தனை பேர்! உடன் பிறந்தவர்கள் துன் பத்தில் சாதல் கண்டும், உள்ளம் இரங்காமல் இருக்கிறார்களே! இந்தக் கொடுமையெல்லாம் எங்கள் காலத்தில் இல்லை. நாங்கள் தொழி லுக்கு மதிப்புக் கொடுத்தோம். முதியவர் களும், வேலை செய்யத் திறனற்று இருப்பவர் களும் தவிர, மற்ற யாவரும் உழைத்தே உண்ண வேண்டும். உழைத்து அதன் பலனை உண்பதிலுள்ள இன்பம் வேறொன் றிலும் கிட்டாது. உழவுக்கும் தொழிலுக்குமே நாங்கள் வந்தனை செய்து வந்தோம்; வீணில் உண்டு களித்திருப்போரை நிந்தனை செய் தோம். மனிதர் உணவை மனிதர் பறிக்கும் வழக்கமும், மனிதர் நோவ மனிதர் பார்க்கும் வாழ்க்கையும் எங்கள் காலத்தில் இல்லை; பணக்காரன் ஏழை என்ற வேறுபாடும் இல்லை; '**எல்லாரும் ஓர் குலம்; எல்லாரும் ஓர் இனம்; எல்லாரும் இந்நாட்டு மன்னர்,**' என நாங்கள் எண்ணி வாழ்ந்து வந்தோம். இதுதான் எங்கள் காலத்தில் மக்கள் இன்ப மாய் வாழ்ந்ததற்கும், பயிர்கள் செழித்து வளர்ந்து நல்ல விளைவைக் கொடுத்ததற்கும் காரணம்,'' என்று கூறினான்.

# 5. மேன்மக்கள் பொறுப்பார்கள்

## I

## வேதாசலமும் அவர் அடிமைகளும்

நெடுங்காலத்திற்கு முன், வேதாசலம் என்ற பெயருள்ள ஒரு செல்வர் இருந்தார். அவருக்குத் திருமகள் அருள் நிரம்பி இருந்தது. பல ஏக்கராப் பரப்புள்ள நன்செய்களும், புன்செய்களும், மா, தெங்கு, பலா முதலிய மரங்கள் செறிந்த தோப்புகளும் அவருக்கு இருந்தன. நூற்றுக் கணக்கான கறவைப் பசுக்களும், ஆடுகளும் அவருக்கு உண்டு. எல்லா நலங்களும் பெற்று வேதாசலம் பெருஞ்சிறப்புடன் வாழ்ந்து வந்தார்.

உலகில், பொதுவாகச் செல்வர்கள் உயர்ந்த நோக்கங்களும், சீரிய ஒழுக்கமும், நற்குணங்களும் அமைந்தவர்களாய் இருப்பதில்லை. ஆகையால், அவர்கள் வாழ்வு சிறப்படைகிறதில்லை. செல்வம் வந்துற்ற போது, செருக்கு மேலோங்கிவிடுகின்றது. இரக்கம் அவர்களை விட்டு விலகிவிடுகின்றது. செல்வர்கள் தங்கள் வேலைக்காரர்களை நடத்தும் முறை மிகவும் இழிவானதாய் இருக்கிறது. சில நேரங்களில் அவர்கள் தங்கள் வேலைக்காரர்களைக் கோபிக்கும்பொழுது பார்த்தால், அவர்கள் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்கும். வேலைக்காரர்களைத் தூற்றும் வார்த்தைகள் காதால் கேட்கத் தகாதனவாக இருக்கும்.

வயிற்றின் கொடுமையால் இவற்றைக் கேட்டுப் பொறுத்திருப்பார்கள் அவ்வேலைக்காரர்கள்; ஆனால், தங்கள் மனத்தில் செல்வனை வெறுத்துச் சபித்துக்கொண்டிருப்பார்கள்.

பண்டைக்காலத்தில் சில செல்வர்கள் மனிதர்களை அடிமைகளாகக் கொண்டிருந்தார்கள். அந்த அடிமைகளை அவர்கள் விலங்குகளினும் இழிவாக நடத்தி வந்தார்கள். அவர்களை மக்களாகவே அவர்கள் நினைப்பதில்லை; கல், மரம் என எண்ணி, அவர்களைக் கடுமையாக வேலை வாங்கி மிகக் கொடுமையாக நடத்தினார்கள். குரங்கின் கையில் அகப்பட்ட பூமாலை போல அவ்வன்கணாளர்களிடம் அகப்பட்டுக்கொண்டு அவர்கள் பட்ட அவதி கொஞ்சநஞ்சமல்ல. அவர்கள் அடைந்த துன்பம் சொல்லத்தான் தரமா? எண்ணத்தான் இயலுமா? அவர்கள் வாழ்வு துன்பம் நிறைந்தது. அது அவர்கள் செய்த பாவம். அதற்காக யார் என் செய்வது! செல்வரிடம் மேன்மையான குணங்கள் பொருந்தியிருப்பின், பொன் மலர் நறுமணம் எய்தியது போலாகுமல்லவா!

## II

## அடிமைகள் அன்பு

ஆனால், வேதாசலமோ, அன்பு, அருள், அடக்கம், பொறுமை முதலிய நற்குணங்கள் நிரம்பப் பெற்றவர். அவரிடம் பல அடிமை

கள் இருந்தார்கள். தம் அடிமைகளைச் சொந் தப் பிள்ளைகளைப் போலவே அவர் பாதுகாத்து வந்தார். உணவு, உடை முதலியவற்றில் அவர் களுக்கு யாதொரு குறையும் வைக்கவில்லை; அவர்கள் உடலை மட்டுமல்லாமல் அறிவையுங் கூட வளர்த்தார்; அவர்களுக்குத் தகுந்த கல் விப் பயிற்சி உண்டாகவும் ஏற்பாடு செய்தார். இவ்வளவு அருங்குணங்கள் அமையப்பெற்ற தலைவரைப் பெற்ற அடிமைகள் அவரிடம் அன்பு காட்டி வந்தது ஒரு வியப்பா? பெற்ற தாயினும் அன்பு 'காட்டும் வேதாசலத்தைத் தலைவராய் அடைந்ததற்குத் தங்கள் முன் பிறப்பின் நற்செயலின் பலனே காரணம் என அவர்கள் எண்ணினார்கள்; அவரை நெஞ்சார வாழ்த்தினார்கள்; அவரது பெரு மையை அடிக்கடி தங்களுக்குள்ளே சொல்லி மகிழ்ந்தார்கள்; அவருடைய சிறப்பு வாய்ந்த குணங்களையும் பெருமைகளையும் புகழ்ந்து பேசாத நாளெல்லாம் பிறவா நாள்களெனக் கருதினார்கள். பல சொல்வானேன்? அவர்க ளுடைய நெஞ்சில் வேதாசலம் கோயில் கொண்டார்.

“நம் தலைவரினும் மேலான ஒருவர் இவ் வுலகில் வேறெவரும் இல்லை. எத்தனையோ செல்வர்கள், தங்கள் அடிமைகளை ஆடுமாடு களாகக் கருதி, மிகக் கொடுமையாக நடத்து கிறார்கள். அவர்கள் தவறிழைப்பதும், ஒழுங் காக நடப்பதும் ஒன்றுதான். வீணில் கொடிய தண்டனையை அவர்களுக்கு விதித்து அவர்

களை மிகுந்த துன்பத்துக்கு ஆளாக்குகிருர்கள். நம்முடைய தலைவரோ, நம் ஆற்றலுக்குத் தக்கபடி வேலை கொடுக்கிருர். நமக்கு நல்ல உணவும் உடையும் குறைவின்றிக் கிடைக்கின்றன. நம்முடைய நலத்திலேயே அவர் கண்ணுங்கருத்துமாயிருக்கிருர். அவர் நம்மிடம் காட்டும் அன்புதான் என்னே! எப்பொழுதும் மலர்ந்த முகம், புன்சிரிப்பு, குளிர்ந்த பார்வை, இனிய சொல்—கடுகடுத்த சொல் மருந்துக்கும் இல்லை! இத்தகைய தலைவரிடம் நாம் அடிமையாய் வாழ்வதே நமக்குப் போதும். வேறு ஒன்றும் வேண்டா!'' என்று வேதாசலத்தைப் புகழ்ந்து பேசினுர்கள் அவர் அடிமைகள்.

## III

## சாத்தான் வேலை

இவ்வாறு தலைவரை அடிமைகள் புகழ்ந்து வாழ்த்துவது சாத்தானுக்குப் பிடிக்கவில்லை. ''அடிமைகளுக்கும் தலைவருக்கும் இவ்வளவு நட்பும் உண்டா? இது இயற்கைக்கு முற்றிலும் மாருனது அல்லவா? இவர்களை எப்படியும் கத்தரித்துவிட வேண்டும்! இவர்களது நட்பைக் குலைக்க வேண்டும்! இதற்கு யாது வழி!'' என்று சாத்தான் சிந்தித்தது.

அடிமைகளுள் அழகப்பன் என்பவன் ஒருவன். அவன் மற்றவர்களைப்போல மனவலிமை உள்ளவன் அல்லன். பிசாசு அவனைத்

தன் வசப்படுத்தி, அவன் துணை கொண்டு மற்ற அடிமைகளின் மனத்தை மாற்ற வேண்டும் என்று எண்ணிற்று. பிசாசு அழகப்பன் மனத்தினுள் புகுந்து அவனை ஆட்டி வைக்கத் தலைப்பட்டது. அவ்வளவு தான் !

## IV

## அழகப்பன் சூளுரை

ஒரு நாள் வேதாசலத்தின் அடிமைகள் மகிழ்வுடன் பேசிக்கொண்டிருந்தார்கள் ; வழக்கம்போலத் தங்கள் தலைவருடைய நற்குணத்தையும், தாராள மனத்தையும், அவர் தங்களை நடத்தும் மேன்மையையும் வானம் அளாவப் பாராட்டிக்கொண்டிருந்தார்கள். பேய்க்குணம் வாய்ந்த அழகப்பன் அவர்களை அதட்டி அமர்த்தி, "இம்மாதிரி நம் தலைவரைக் கங்கு கரையில்லாமல், கண் மூடித்தனமாகப் புகழ்வது சுத்த முட்டாள்தனம். நாம் உழைப்பது போல உழைத்தால், ஒரு பேய்கூட நம்பால் இரக்கங்கொள்ளும். நம் தலைவர் மனத்திற்கு மகிழ்ச்சி உண்டாகும்படி நடந்து நாம் செயல்களைச் செய்கிறோம். அவருடைய பாட்டுக்குத் தகுந்தபடி நாம் தாளம் போடுகிறோம் ; அவர் குறிப்பறிந்து செயல்களைச் செய்கிறோம். அவர் 'எள்' என்று சொல்லுமுன் நாம் எண்ணெயாய் நிற்கிறோம். அவர் மனம் எவ்விதத்திலும் கோணுதபடி கருத்துடன்

இருந்து நாம் அவருக்குத் தொண்டு செய்கிறோம். அதனால் அவர் மகிழ்ச்சி அடைகிறார்! நம்மிடத்தில் அன்பாய் இருக்கிறார். இதில் என்ன வியப்பு இருக்கிறது? நீங்கள் சற்று ஏறுமாறாக நடவுங்கள்; ஏட்டிக்குப்போட்டி செய்யுங்கள். அவர் சீற்றங்கொள்ளும்படி ஏதாவது ஒன்றைச் செய்து பாருங்கள். அப்பொழுது அவர் சாயம் வெளுத்துவிடும்! தர்ம புத்திரரின் அவதாரமென நீங்கள் கொண்டாடும் வேதாசலம் துர்வாச முனிவராய்விடுவார்! அப்போது நாம் படும்பாடு நாய்கூடப் படாது!'' என்று பிதற்றினான்.

உடனே மற்றோர் அடிமை குறுக்கிட்டு, "அது ஒரு போதும் நடவாது! இன்று நேற்றன்று நம்முடைய தலைவருடன் நாம் பழகுவது. அவருடைய குணத்தை நாம் நன்கு அறிவோம். நாம் குற்றம் செய்த போதிலும் ஒரு குழந்தையிடம் தாய் நடந்துகொள்ளும் விதத்திலேயே அவர் நம்மிடம் நடந்துகொள்வர்; நம்மைச் சீறிச் சினந்து பேசார்; தீங்கு செய்யவும் மாட்டார். இது உண்மை. பந்தயம் வேண்டுமானாலும் வைத்துக்கொள்வோம்!'' என்றான்.

அழகப்பன், "சரி, பந்தயம் வைப்போம்! தலைவர் மனம் வருந்தும்படி ஒரு செயலை நான் செய்கிறேன். அவர் என்ன செய்கிறார் என்பதைப் பாருங்கள்! அப்படிக் கோபமூண்டு பதிலுக்குப் பதில் எனக்கு ஏதாவது தீங்கு செய்வதை நான் உங்களுக்குக் காட்டா

விட்டால், என் பெயர் அழகப்பன் அன்று! என் பெயரை மாற்றிக் கூப்பிடுங்கள்! என் இரு காதுகளையும் அறுத்து உங்கள் முன்னிலையில் வைத்துவிடுகிறேன்! சரிதானா?'' என்று படபடப்புடன் சொன்னான்.

"நீ காதுகளையும் அறுத்துக்கொள்ள வேண்டா; உன் பெயரையும் மாற்றிக்கொள்ள வேண்டா. நீ தலைவரைச் சீற்றங்கொள்ளச் செய்ய முடியாது. நீ தோற்றுப்போவாயாகில், தீபாவளிக்கு உனக்குக் கிடைக்கும் துணிகளையும் பொங்கல் நாளில் கிடைக்கும் புதுப்பரிசையும் எங்களிடம் கொடுத்துவிட வேண்டும். நாங்கள் சொன்னது பொய்யாய்விட்டால், எங்களுக்குக் கிடைக்கும் துணி மணிகளையும் பணத்தையும் உனக்குத் தந்துவிடுகிறோம். நீ அடாத செயலைச் செய்யும்பொழுது தலைவர் அளவு கடந்து கோபித்து உன்னைக் கொடிய தண்டனைக்கு உள்ளாக்குவாரென்று நாங்கள் சிறிதும் நம்பவில்லை. அவருடைய பொறுமையில் எங்களுக்கு முழு நம்பிக்கை உண்டு. இதில் ஐயமேயில்லை. ஆனால், கடவுள் என்ன எண்ணிக்கொண்டிருக்கிறாரோ!

" ஆராயும் வேளையிற் பிரமாதி யானாலும்
ஐய!ஒரு செயலுமில்லை?
அமைதியொடு பேசாது பெருமைபெறு குணசந்திரர்
ஆமென இருந்தபேரும்
நேராக ஒருகோபம் ஒருவேளை வரஅந்த
நிறைவொன்று மில்லாமலே
நெட்டுயிர்த் துத்தட்ட ழிந்துளறுவார்."

என்ற மொழிப்படி ஒரு வேளை கால மாறுபாட்

டால் கோபித்துக்கொள்கிருர் என்று வைத்துக்கொள்வோம். அதனுல் கொடிய தண்டனையைக் கொள்ள வேண்டி வருமேயென்று நீ சிறிதும் அஞ்ச வேண்டா. தக்க நேரம் பார்த்து நாங்கள் தலைவரிடத்தில் உன்பால் பரிந்து பேசி, உன்னிடம் இரக்கங்காட்டி உன் பிழையைப் பொறுத்தருளச் செய்து, உனக்கு விடுதலையும் வாங்கித் தருகிரும் !'' என்று அந்த அடிமை அழகப்பனுக்கு உறுதி மொழியும் கூறினுன்.

மறு நாளே தலைவருக்குச் செற்றமூட்டி அவரை ஆட்டி வைப்பதாகச் சூள் உரைத்தான் அழகப்பன். இது விசுவாமித்திரர் அரிச்சந்திரனைப் பொய்யனுக்குவதாக வசிட்டரிடம் கூறிய சூளுரையைப் போன்றிருந்தது.

## V

## அழகப்பனது அடாத செயல்

வேதாசலத்தின் எண்ணிறந்த ஆடுகள் அழகப்பன் பொறுப்பில் விடப்பட்டிருந்தன. அவைகளைக் காப்பது அவன் கடமை. அந்த ஆடுகளுள் மிக்க வலிவும் அழகும் வாய்ந்த ஒரு செம்மறி ஆடு இருந்தது. அதன் கொம்புகள் நன்ருய் வளர்ந்து பல திருகல்களுடன் கூடிப் பார்வைக்கு மிக அழகாயிருந்தன. அந்த ஆட்டை வேதாசலம் தம் உயிர் போல எண்ணி அதனிடம் அதிக விருப்பம் வைத்திருந்தார்.

ஒரு நாள் அவருடைய ஆடுகளைப் பார்க்க நண்பர் சிலர் வந்திருந்தனர். அவர்களுக்கு வேதாசலம் அந்தச் செம்மறியாட்டைக் காட்ட எண்ணியிருந்தனர்; ஆடுகள் அடைக்கப் பட்டிருக்கும் இடத்துக்கு அவர்களைக் கூட்டிப் போனார். அவருடைய அடிமைகளும் அப் பொழுது அங்கிருந்தார்கள். அப்பொழுது அழகப்பன் தன் நண்பர்களுக்குக் கண் சாடை காட்டினான். அவ்வாறு செய்தது, 'தலைவரை உடனே எவ்வளவு சினம் அடையச் செய்கிறேன் பாருங்கள்!' என்று சொல்வது போன்று இருந்தது.

ஆட்டு மந்தைக்குள் அந்த அழகிய செம் மறியாட்டை வேதாசலத்தால் சுலபமாகக் கண்டு பிடிக்க முடியவில்லை. "அப்பா, அழ கப்பா, இங்கே வந்திருப்பவர்கள் என் நண்பர் கள். இவர்களுக்கு எனக்கு மிகவும் விருப்ப மான—என் கண் போன்ற—அழகிய செம்மறி யாட்டைக் காட்ட விரும்புகிறேன். ஆகவே, நீ அந்த ஆட்டைப் பிடித்துக்கொண்டு வா," என்று அவர் அன்புடன் சொன்னார்.

அவ்வளவுதான்! விரைந்து ஆட்டு மந்தை யில் நுழைந்தான் அழகப்பன்; அந்தச் செம் மறியாட்டை ஒரு கையால் கழுத்தைப் பிடித் துத் தூக்கினான்; மற்றொரு கையால் அதன் வலக்காலை மடித்து மரக்கிளையை ஒடிப்பது போலச் சடக்கென்று ஒடித்தான்; அவ்வாறே மற்றக் கால்களையும் ஒடித்தான். இரத்தம்

பீரிட ஆடு கதறிக்கொண்டே கீழே விழுந்து உயிர் துறந்தது.

அப்போது பேய் ஒரு மரத்தில் உட்கார்ந்து தன் வயப்பட்டுத் தன் விருப்பம் போல ஆடும் அழகப்பன் செயலைக் கண்டு மகிழ்ந்தது.

## VI

## தலைவரின் பொறுமை

இந்தக் காட்சி வேதாசலத்தையும் அவர் நண்பர்களையும் திடுக்கிடச் செய்தது. அவர்கள் மிகுந்த நடுக்கம் கொண்டார்கள்; தாங்கள் பார்த்தது கனவா நனவா என்று ஐயுற்ருர்கள். அடிமைகள் அடுத்த நொடியில் யாது நேரிடுமோ என்று அஞ்சினுர்கள். இந்தக் கொடுஞ்செயலைக் கண்டதும் வேதாசலம் திடுக்கிட்டார். இந்த நிகழ்ச்சியை அவர் சிறிதும் எதிர்பார்த்தாரில்லை; சிறிது நேரம் மனத் துயருடன் பேசாமலிருந்தார். அவருக்கு இன்னது செய்வது என்பதே தெரியவில்லை.

அவர் சிறிது நேரம் தலை கவிழ்ந்து தரையை நோக்கியவண்ணம் இருந்தார்; பின்னர் அண்ணுந்து பார்த்து, 'கடவுளே!' என்று பெருமூச்சு விட்டார். உடனே அவர் முகம் ஒரு மாறுதலை அடைந்தது. முகத்தில் புன்சிரிப்புத் தவழ்ந்தது. அவர் அழகப்பனைப் பார்த்து, "அழகப்பா, இது உன் பிழை அன்று. நீ பேய் வசப்பட்டிருக்கிருய்; அது உன்னை இவ்வாறு

ஆட்டி வைக்கிறது! அதன் கட்டளேப்படியே நீ நடந்தாய். எனக்குத் தலைவர் கடவுள். அவர் உன் தலைவனினும் வலியவர். அவர் எனக்கு இட்டிருக்கும் கட்டளை வேறு. அதன்படி நான் பொறுத்துக்கொள்கிறேன்; உன்னிடம் சினம் கொள்ளவில்லை. நீ செய்த பிழைக்கு உன்னைச் சிறையில் வைக்கவோ, உனக்குத் துன்பம் இழைக்கவோ நான் உடன்படேன். அந்த அச்சம் உனக்குச் சிறிதும் வேண்டா. உன் னிடம் எனக்குப் பகையே இல்லை. நீ நல்ல குணங்களை அடைய வேண்டுமென்பதுதான் என் ஆவல். பேய்க்குணம் உன்னை விட்டு அகலவேண்டுமென்பதே என் வேண்டுகோள். இனி நீ அடிமையல்லை. உனக்கு முழு உரிமை அளிக்கிறேன். உன் விருப்பப்படி நீ எங்கு வேண்டுமானாலும் செல்லலாம். உனக்கு உடை களும் சிறிது பணமும் தருகிறேன்,'' என்று சொல்லி அவனுக்கு இன்னும் பல அறிவுரை களைக் கூறிவிட்டுத் தம் நண்பர்களுடனும் அடிமைகளுடனும் வீட்டுக்குத் திரும்பினர். மரத்திலிருந்து இதைப் பார்த்த பேய் மனம் கசிந்து கீழே விழுந்தது.

தன்னிலும் வலிமை உள்ள ஒருவன் தனக்குத் தீங்கு செய்யின், அவனைச் சினந்து எதிர்த்துப் பதிலுக்குப் பதில் தீங்கு செய்ய விருப்பமிருந்தாலும், செயல் பலியாததால், ஒருவன் சினத்தை வெளிக்காட்டாமல் அடக் கிப் பொறுமையுடன் இருக்கக் கூடும். இதை நாம் பொறுமை என்று சொல்ல முடியாது.

பழிக்குப் பழி வாங்கப் போதிய ஆற்றல் இருந்தும், தன் சினம் செல்லக் கூடியதாயிருந்தும், ஒருவன் பிறர் தீங்கு செய்யின் சிறிதும்சினங் கொள்ளாது பொறுமையுடன் இருப்பானாகில் அதுவே வியக்கத்தக்கது. அதுவே, உண்மையில் பொறுமை எனப்படும். வேதாசலம் தம் அடிமையை என்ன வேண்டுமானாலும் செய்யலாம். அவர் நினைத்தால் அழகப்பனைக் கைவிலங்கிட்டுச் சிறையிலிட்டுத் துன்புறுத்தலாம்; அவன் உயிரையும் வாங்கிவிடலாம். அவருக்கு அவ்வளவு ஆற்றல் இருந்தது. அழகப்பன் மிகக் கொடிய செயலைச் செய்திருந்தும், வேதாசலம் சிறிதும் சினம் கொள்ளவில்லை; பொறுமையையே தம் அணிகலனாகக் கொண்டார். இவ்விதப் பொறுமையே மெச்சத் தகுந்தது.

"செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான்; அல்லிடத்துக் காக்கில்என் ? காவாக்கால் என் ?" (திருக்குறள்)

"ஒறுக்கும் மதுகை உரனுடை யாளன்
பொறுக்கும் பொறையே பொறை." (நாலடியார்)

# 6. பெருஞ்செல்வர் குமாரசாமி முதலியார்

## I

## உழைப்பின் பயன்

வேணுபுரம் என்பது அழகிய ஒரு சிற்றூர். அதில் பல்லாண்டுகளுக்கு முன்பு நாகலிங்க முதலியார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் செல்வர் அல்லர்; எளிய வாழ்வே வாழ்ந்து வந்தார். அவருக்குக் குமாரசாமி என்னும் ஒரு மைந்தர் உண்டு. அவருக்கு மணமான மறு ஆண்டே நாகலிங்க முதலியார் காலஞ்சென்ருர்.

குமாரசாமி முதலியாருக்குக் கிடைத்த சொத்து, ஒரு வீடும், சிறிது நிலமும், ஒரு பசுவுந்தான். குமாரசாமி முதலியாரும் அவர் மனைவியும் மனம் ஒத்து இல்வாழ்க்கை நடத்தினர். குமாரசாமியிடம் சோம்பல் என்பதே இல்லை. அவர் நல்ல உழைப்பாளர். அவர் அதிகாலையில் எழுந்து வயலுக்குச் சென்று ஏர் உழுவார்; தகுந்த உரம் இட்டுப் பயிரைத் தாமே கவனித்து வருவார். இதனால் அவருக்கு நல்ல விளைவு கிடைத்தது. தவிர, அவருக்கு உரிமையான ஒரு தரிசு நிலம் இருந்தது. அவர் அதை வெட்டிக் கொத்திப் பண்படுத்தி, அதைச் சுற்றி நல்ல வேலியிட்டு, அதைச் சிறு தோட்டமாக்கினர்; அதில்

ஒரு சிறு கிணறும் வெட்டினர். தெங்கு, மா, எலுமிச்சை முதலிய மரங்களை நட்டு, வியர்க்க உழைத்து, நீர் பாய்ச்சி, அவைகளை மிகவும் கவனமாய் வளர்த்து வந்தார். அவர் ஒவ்வொரு நாளும் தோட்டத்திற்கு வந்து, ஒவ்வொரு செடியினருகிலும் சிறிது நேரம் இருந்து அதைக் கண்டு களித்துச் செல்வார். நாளடைவில் மரங்கள் தகுந்த பலனைக் கொடுக்க ஆரம்பித்தன ; இவ்விதம் தோட்டத்திலிருந்தும், நெல் வயலிலிருந்தும் கிடைக்கும் வரும்படி அவர் குடும்ப வாழ்விற்குப் போக எஞ்சியிருந்தது. அதை அவர் வீணுகச் செலவழியாமல் விலைப்படுத்தி, பணத்தைப் பாங்கியில் சேர்த்து வந்தார்.

அவர் மனைவியும் சும்மா இருக்கவில்லை ; பசுவிற்கு வேண்டிய புல் தழை முதலியவற்றைத் தானே வெளியிற்சென்று கொண்டு வந்தாள் ; அதற்குப் போதுமான தீனியளித்துப் பாதுகாத்து வந்தாள் ; பசு இருக்கும் தொழுவத்தைத் துப்புரவு செய்து பசுவை நல்ல நிலையில் வைத்திருந்தாள். பசு ஏராளமாகப் பாலைக் கொடுத்தது. சரியான தீனி அளிக்கப்பட்டதால் அதன் பால் மிகச் சத்துள்ளதாய் இருந்தது. அத்தகைய பாலை அவள் நீர் கலவாமல் கொடுத்ததால், எல்லாரும் சிறிது அதிக விலை கொடுத்துங்கூட அவளிடமே பால் வாங்கினர். இதனுலும் பொருள் கிடைத்தது. அவள் தன் வீட்டுக் கொல்லையில் புடல், அவரை, கத்தரி, மணித்தக்காளி

முதலியவற்றைப் பயிர் செய்து அவற்றிற்குப் போதுமான தண்ணீர் இறைத்து வந்தாள். அந்தக் காய்கறிகளை விற்பதாலும் அவர்களுக்குச் சிறிது பொருள் வருவாய் வரவரப் பெருகிக்கொண்டே வந்தது. இரண்டோர் ஆண்டுகளில் அந்தப் பொருளைக்கொண்டு குமாரசாமி முதலியார் இன்னும் அதிகமாக நிலம் வாங்கினுர். அப்படியிருந்தும், அவர் தம் உழைப்பை நிறுத்தவில்லை. ஆகையால், திருமகள் அவர்கள் வீட்டிற்புகுந்து வாழலானுள்.

" நாரணன் மார்பினிலே—அன்பு
நலமுற நித்தமும் இணைந்திருப்பாள்
தோரணப் பந்தரிலும்—பசுத்
தொழுவிலும் சுடர்மணி மாடத்திலும்
வீரர்தந் தோளினிலும்—உடல்
வியர்த்திட வுழைப்பவர் தொழில்களிலும்
பாரதி சிரத்தினிலும்—ஒளி
பரவிட வீற்றிருந் தருள்புரிவாள்."

என்று தமிழ்க் கவிஞர் பாரதியார் திருமகளைப் பாடியது குமாரசாமி முதலியார் வாழ்விற்கும் பொருத்தமாய் இருந்தது.

மனைவி வந்த இருபது ஆண்டுகளுக்குள் குமாரசாமி முதலியார் சீமானுகிவிட்டார். அந்தச் சிற்றூரில் பெரும்பான்மை நிலம் அவருக்கே உரியதாகிவிட்டது. ஏராளமான பசுக்களும், காளைகளும் அவரிடம் இருந்தன. அவர் தொகையாகவும் பணம் கையில் மிகுதியாய் வைத்திருந்தார். அந்தப் பகுதியில்

அவரைவிடச் செல்வர் ஒருவருமில்லை. வயல் களை உழுது பயிர் செய்வதற்கும், பசு முதலிய வற்றை மேய்ப்பதற்கும், வீட்டுச் செயல்களைக் கவனிப்பதற்கும் பல வேலைக்காரர்களை அவர் நியமித்திருந்தார். அவர் வாழ்ந்த மாவட்டத் தில் அவரையும் அவருடைய ஏராளமான செல்வத்தையும் அறியாதவர் ஒருவருமில்லை. பெருஞ்செல்வர் குமாரசாமி முதலியார் என்ற பெயர் எங்கும் பரவியது.

செல்வரான பிறகு பெரிய மனிதர் பலர், குமாரசாமி முதலியாருடன் நட்புக்கொண்ட னர். அவர்கள் அடிக்கடி அவர் வீட்டுக்கு வந்து, விருந்துண்டு, களித்துச் செலவார்கள். குமாரசாமி முதலியார் நல்ல பண்பு வாய்ந் தவர்; தம் வீட்டுக்கு வந்தவர்களை மரியாதை யுடன் வரவேற்று நன்கு உபசரிப்பவர்; தம் மனைவியிடமும் மிகுந்தமதிப்புடையவர். அவர் வறியராயிருந்த தாம் மிகுந்த செல்வரானது அவள் வந்த பிறகுதான் என எண்ணினர். 'ஏர் பிடித்தவன் என்ன செய்வான்? பானை பிடித்தவள் பாக்கியம்!' என்பது பழமொழி அல்லவா?

## II

### 'செல்வம் சகடக்கால் போல வரும்.'

குமாரசாமி முதலியார் செல்வராயிருந் தும் அவருக்குச் சில குறைகள் இருந்தன. அவருடைய இரண்டு பிள்ளைகளும் ஒரு பெண்

னும் இளமையில் இறந்துவிட்டார்கள். மற்றப் பையனே, தன் தகப்பனரின் குணத்துக்கு முற்றிலும் மாறுபட்டவன் ; முழுச் சோம்பேறி. அவனுக்குத் தீயவர்களின் உறவு மிகுதி. சீட்டாடுதல், குடி முதலிய பல தீய பழக்கங்களும் அவனிடம் குடிகொண்டன.

அவன் அழித்துவிட்ட பொருளுக்குக் கணக்கில்லே. அவனுல் பெற்ருேர்கள் பட்ட சிறுமையோ சொல்லத் தரமன்று. அவர்கள் ஒவ்வொரு நாளும் அவனேப்பற்றி என்ன பழிச்சொல் கேட்க வேண்டி வருமோ என்று கவலேயும் அச்சமும் கொண்டார்கள். அவனுக்கு மணமும் ஆயிற்று. அவன் மனேவி அவனேப் பம்பரமாக ஆட்டி வந்தாள். அவள் வந்ததும் பெற்ருேரிடமிருந்து அவனேப் பிரித்து வேறு குடித்தனம் ஏற்படுத்திவிட்டாள். சொத்தில் தனக்குரிய பங்கைத் தந்து விடவேண்டுமென்று தகப்பனுரை வற்புறுத்தி அவன் வாங்கிக்கொண்டான் ; அதையும் விரைவில் இழந்து அயலூருக்குப் போய் விட்டான்.

குமாரசாமி முதலியாரைத் துன்பம் இத்துடன் விட்டபாடில்லே. அவர் பணம் சேர்த்திருந்த சில பாங்கிகள் முறிந்துவிட்டன. ஆகையால், தாம் சேர்த்த பொருளில் பெரும் பகுதியை அவர் இழந்துவிட்டார். மழை பெய்யாமல் பயிர்கள் தீய்ந்து போனதனுலும் ஏராளமாக இழப்பு ஏற்பட்டது. நோய்களால்

மாடுகளெல்லாம் இறந்துவிட்டன. இப்படிப் பல வகையிலும் இழப்பு ஏற்பட்டுக் கடன் உண்டாகித் தாம் வாழ்ந்த வீடு, தம் நிலம் முதலிய யாவும் அவர் இழந்து வறியவர் ஆகி விட்டார்.

செல்வம் நிலையில்லாதது. அது சக்கரம் போலச் சுழன்று வரும். செல்வனயிருந்தவன் ஏழையாவதையும், ஏழை செல்வனவதையும் நாம் பார்த்திருக்கிறோம். அரசர்களுங்கூடத் தங்கள் நகரிலிருந்து விரட்டப்பட்டு வேற்றூர் சென்று உழைத்து வயிறு வளர்க்க வேண்டிய நிலைமையை அடைகின்றூர்கள். கருமேகங் களினூடே மின்னல் தோன்றி மறைவது போலச் செல்வம் நிலைத்திராது. ஊழ் வலி யால் ஒருவனுக்குப் பெருஞ்செல்வம் உண் டானல், அது இருக்கும் பொழுதே அதைத் தனக்கும் பிறருக்கும் நலம் பயக்கும் வழிகளில் பயன்படுத்திக்கொள்பவனே அறி ஞன்.

எப்பொழுதும் ஏழையாயிருக்கும் ஒரு வன் படும் துன்பத்தைவிடச் செல்வனு யிருந்து பல இன்பங்களையும் துய்த்த ஒருவன் திடீரென அந்தச் செல்வத்தை இழக்க நேரி டின், அவன் படும் துயரம் தாங்க முடியாத தாக இருக்கும். குமாரசாமி முதலியார் இனி வேறு யாரிடமாவது வேலைக்கமர்ந்து வாழ வேண்டிய நிலைமைக்கு வந்துவிட்டார். அவ ருக்கு இப்பொழுது ஐம்பத்தைந்து வயதிருக் கும். அவர் மனம் மிகவும் கலக்கம் அடைந்தி

ருந்தது. இன்னது செய்வதென்று தெரியாமல் அவர் தவித்துக்கொண்டிருந்தார்.

## III
## பிறரிடம் வேலைக்கமர்தல்

அந்த ஊரில் நாராயணசாமி முதலியார் என்னும் செல்வர் ஒருவர் இருந்தார். அவர் குமாரசாமி முதலியார் நிலைமையைக் கண்டு மிகவும் இரக்கப்பட்டார். குமாரசாமி முதலியார் குணம் அவர் மனத்தைக் கவர்ந்திருந்தது. குமாரசாமி செல்வராயிருந்த பொழுது நாராயணசாமி முதலியாரிடம் நட்புக் கொண்டிருந்தார்; அவரைப் பல முறை உபசரித்துமிருக்கிறார். நாராயணசாமி முதலியார், இவ்வளவு தாராள குணமும் நல்லெண்ணமும் உள்ள குமாரசாமிக்கு இந்நிலை நேர்ந்ததே என்று இரங்கி, அவருக்கு இப்போது தம்மால் கூடிய அளவு உதவி செய்து அவரது மனக் கவலையைப் போக்குவது தம் கடமையென உணர்ந்தார். பணமிருக்கும் வரையிலே தான் உலக மக்கள் ஒருவனை மதித்து அவனிடம் நட்புக்கொள்ளுவார்கள். அவன் பணத்தை இழந்த பின், முன்னர் அவனைச் சூழ்ந்து அவன் குணங்களை மெச்சி உண்மை நட்பாளர்கள்போல நடித்த வீணர்கள், அவன் இருக்கும் தெருவிலேகூடப் போகமாட்டார்கள். அப்படியானால், அவனுக்கு அவர்கள்

ஒரு சிறு உதவியுங்கூடச் செய்யமாட்டார்க ளென்பதைச் சொல்லவும் வேண்டுமா !

நாராயணசாமி முதலியார் குமாரசாமி யிடம் சென்று, "ஏதோ ஊழ் வலியால் உங் களுக்கு இந்நிலை நேர்ந்துவிட்டது. உங்கள் மனம் படும் துன்பத்தை நான் அறிவேன். நடந்ததைக் குறித்து வருந்துவதில் பய னில்லை. 'இவ்வளவுதான் நாம் கொடுத்து வைத்தது!' என்று மனத்தைத் திடப்படுத்திக் கொள்ளுங்கள். நீங்கள் ஒன்றுக்கும் கவலைப் பட வேண்டா. என்னை உங்களுடைய தம்பி போல நினைத்துக்கொள்ளுங்கள். உங்கள் ஆற்றலுக்குத் தகுந்தபடி என் வீட்டில் வேலை செய்யுங்கள். உங்கள் மனைவியும் என் மனை விக்கு உதவியாக இருக்கட்டும். உங்களுக்குத் தேவையானவற்றை என்னிடம் கூசாமல் கேட்டு வாங்கிக்கொள்ளுங்கள். என் வீட்டை உங்கள் வீடாகவே நினைத்து மகிழ்வுடன் இருங்கள்," என்று பல இனிய மொழிகள் கூறி ஆறுதல் சொன்னார்.

நாராயணசாமி முதலியார் தம் அல்லற் காலத்தில் இவ்வித அன்பும் ஆதரவும் காட்டி யதற்காகக் குமாரசாமி முதலியார் அவருக்குத் தம் மனமார்ந்த நன்றியறிதலைத் தெரிவித் தார். அன்று முதல் அவரும் அவர் மனைவி யும் நாராயணசாமி முதலியாருடைய வீட்டில் வேலைக்கு அமர்ந்தனர். சில மாதங்கள் வரை அவர் மனத்துக்கு இவ்விதம் வேலை செய்வது மிகுந்த சங்கடத்தை உண்டு பண்ணிற்று.

ஆயினும், நாளடைவில் அவர்களுடைய துன்பமெல்லாம் சிறிது சிறிதாக அவர்களுடைய மனத்தை விட்டு அகன்றுவிட்டது. இந்த வேலை அவர்களுடைய மனத்திற்கு ஒத்தும் போய்விட்டது. அவர்கள் தங்களால் கூடிய வரை தங்கள் தலைவருக்கு வஞ்சகமில்லாமல் பாடுபட்டார்கள். நாராயணசாமிக்கும் அவர்களை வேலைக்கு அமர்த்திக்கொண்டதில் ஒரு விதத்தில் மகிழ்ச்சி. ஏனெனில், குமாரசாமி உண்மையுள்ளவராயும், உழைப்பாளராயும் இருந்தார். உழவுச் செயல்களிலும், குடும்பக் கலைகளிலும், உலக வாழ்விலும் நல்ல பழக்கம் பெற்ற ஒரு பெரியாரைத் தமக்குத் துணையாக வைத்துக்கொள்வது மிகுந்த உதவியாயிருக்குமென்று அவர் கருதினர். ஆனல், செல்வத்தில் வாழ்ந்த ஒருவரை இவ்வளவு தாழ்ந்த நிலையில் வைக்க நேர்ந்ததே என்பதை நினைக்குந்தோறும் அவர் மனம் சிறிது கலக்கம் அடைந்தது.

## IV

## வாழ்க்கையின் குறிக்கோள்

ஒரு நாள் நாராயணசாமி முதலியார் வீட்டிற்கு அவர் உறவினர் சிலர் வந்திருந்தனர். அவர்கள் கூடத்தில் உட்கார்ந்து மகிழ்ச்சியுடன் உரையாடிக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது குமாரசாமி அந்த வழியாக ஏதோ காரியமாக வெளியே சென்ருர். அப்பொழுது வீட்டுத் தலைவர் விருந்தாளிகளுள் ஒருவரைப் பார்த்து, "அதோ போகிருரே, அவர் யார் தெரியுமா?" என்ருர்.

வி: தெரியாதே! ஏன்? அவரைப்பற்றிய செய்தி என்ன?

நா: அவர் ஒரு காலத்தில் மிகுந்த செல்வராயிருந்தார். நீங்கள்கூடக் கேள்விப்பட்டிருக்கலாமே! பெருஞ்செல்வர் குமாரசாமி முதலியார் அவரே.

வி: ஆம்; நானும் கேள்விப்பட்டிருக்கிறேன். அவரது புகழ் இந்த நாடு முழுவதும் பரவியிருக்கிறது. ஆனல், அவர் தம் செல்வம் முழுவதையும் இழந்து மிகுந்த வறுமையில் ஆழ்ந்திருப்பதாகக் கேள்விப்பட்டேன்.

நா: அவருடைய நிலைமை மிக இரங்கத்தக்கது. வறுமை அவரைச் சூழ்ந்துவிட்டது. எத்தனையோ வேலைக்காரர்களை அடக்கியாண்டு சிறப்புடன் வாழ்ந்த முதலியாரும் அவர் மனைவியும் இப்பொழுது இங்கு வேலை

செய்து பிழைக்கிறார்கள். இக்காட்சி கொடுமை யிலும் கொடுமையல்லவா ?

வி: அடடா! அவரா இவர்! 'செல்வம் சகடக்கால் போல வரும்,' என்பார்களே, அது உண்மைதான். 'ஆறிடும் மேடும் மடு வும்போலாம் செல்வம், மாறிடும் ஏறிடும்,' என்பதும் உண்மையே. அவர்கள் இத்தகைய நிலைமையில் இருக்க அவர்கள் மனம் எவ் வளவு துன்பப்படுகிறதோ! அவர்கள் மனம் வருந்தவில்லையா? அவர்கள் எவ்விதம் இந் தத் துன்பத்தைப் பொறுத்துக்கொள்கிறார் களோ!

நா: அவர்களுடைய மனத்தில் இருப் பது நமக்கு ஒன்றும் தெரியவில்லை. ஆனால், பார்வைக்கு எப்பொழுதும் முகமலர்ச்சியுட னும் மகிழ்ச்சியுடனுந்தான் தோன்றுகிறார் கள். அவர்கள் வருத்தத்தை வெளிக்காட்டிக் கொள்ளாமல் அடக்கிக்கொண்டிருந்தாலும் இருக்கலாம். இருந்தாலும், அகத்தின் அழகு முகத்தில் தெரியாமலா போகும்?

வி: எனக்கு அவர்களைப் பார்க்க வேண்டுமென்று விருப்பமாயிருக்கிறது. அவ ரிடம் சில செய்திகளைக் குறித்துப் பேசவும் விரும்புகிறேன். நீங்கள் அவரை இங்குக் கூப்பிடுகிறீர்களா?

நா: அதற்கென்ன தடை! இதோ கூப் பிடுகிறேன்.

"மாமா, சிறிது நேரம் இப்படி வாருங்க ளேன்! அங்கே என்ன செய்கிறீர்கள்?"

என்று குமாரசாமியை நாராயணசாமி கூப் பிட்டார்.

குமாரசாமி முதலியார் வந்ததும், விருந் தாளியும் நாராயணசாமி முதலியாரும் அவ ருக்கு மரியாதை செய்து இருக்கை கொடுத்து உட்காரச் செய்தார்கள். குமாரசாமி முதலி யார் கடவுளை நினைத்துக்கொண்டு அமர்ந் தார்.

விருந்தினர், " நான் உங்களைப்பற்றியும் உங்கள் நல்லகுணத்தைப் பற்றியும் பெரிதும் கேள்விப்பட்டிருக்கிறேன். உங்களுக்கு இவ் வித நிலைமை உண்டானதைப் பற்றி எனக்கு மிகவும் வருத்தமாய் இருக்கிறது! எல்லாம் விதியின் பயன்! அரிச்சந்திரன் தோட்டிக்கு அடிமையாகி வேலை செய்ததும், அவன் மனைவி சந்திரமதி காளகண்டையருக்கு அடிமைப்பட்டதும் விதியின் செயலேயன்றி வேறென்ன? எங்களைப் பார்த்ததும் உங்க ளுக்கு மனத்தில் துன்பம் மிகலாம். நீங்கள் பல நலங்களுடன் முன்பு வாழ்ந்ததும், இப் போதுள்ள உங்கள் நிலைமையும் இப்போது உங்கள் நினைவுக்கு வந்து மனத்தைப் புண் படுத்தலாம்," என்றார்.

குமாரசாமி முதலியார் புன்சிரிப்புச் சிரித்துக்கொண்டே, " இன்பம் எது, துன்பம் எது என்று நான் உங்களுக்குச் சொன்னால் நீங்கள் அதை நம்பமாட்டீர்கள். என்னுடைய மனைவியிடமே நீங்கள் கேட்டுப் பாருங்கள். அவள் மனத்திலுள்ளதை ஒளியாமல் சொல்

லுவாள். முழு உண்மையையும் அவள் உரைப்பாள்,'' என்ருர்.

அப்பொழுது விருந்தினர், கதவின் பக்கத்தில் நாாாயணசாமி மனைவியுடன் உட்கார்ந்திருந்த குமாரசாமி முதலியாரின் மனைவியை நோக்கி, ''பெரியம்மா, நீங்கள் முன்னிருந்த நிலையுடன் உங்கள் இக்கால நிலைமையை ஒப்பிட்டுப் பார்க்கையில் உங்கள் மனம் எவ்விதம் இருக்கிறதென்று சொல்வீர்களா ?'' என்று கேட்டார்.

அவள், '' நானும் என் கணவரும் முப்பது ஆண்டுகளாகச் செல்வ வாழ்க்கை வாழ்ந்து வந்தோம் என்பது உண்மைதான். ஆனல், அப்பொழுது நாங்கள் இன்பம் என்பதையே அறியாதவர்கள் என்றுதான் சொல்ல வேண்டும். நாங்கள் செல்வத்தை இழந்து உழைப்பாளிகளாய் உழைத்து இந்த வாழ்க்கை தொடங்கிய இந்த இரண்டு ஆண்டுகளாகத் தான் உண்மை இன்பத்தைக் கண்டோம். இவ்வாழ்க்கையே எங்களுக்கு இன்பமாய் இருக்கின்றது. இதைத் தவிர வேறு வாழ்க்கையை நாங்கள் விரும்பவில்லை,'' என்ருள்.

இவ்விதம் அவள் கூறியது நாராயணசாமி முதலியாருக்கும் விருந்தினருக்கும் மிகுந்த வியப்பை விளைவித்தது. விருந்தினர் சற்றுத் தலையை நீட்டி அந்தக் கிழவியின் முகத்தை ஆவலுடன் பார்த்தார். அவள் முகத்தில் மகிழ்ச்சியே நிலவியது. உண்மையிலேயே அவள் இன்பமுள்ளவளாய் இருந்தா

ளென்பதை அவள் முகக்குறியே காட்டிற்று. அவள் மலர்ந்த முகத்துடனும் புன்சிரிப்புடனும் தன் கணவரையே நோக்கிக்கொண்டிருந்தாள். அவரும் அவ்விதமே அவளை நோக்கினர்.

குமாரசாமியின் மனைவி, "நான் உண்மையாகச் சொல்லுகிறேன் : நாங்கள் செல்வராயிருந்தவரை உண்மை இன்பத்தைக் காணவே இல்லை. இப்பொழுது செல்வத்தையெல்லாம் இழந்து, உழைத்து வாழத் தொடங்கியபடியால், மிகுந்த இன்பத்தை அடைகிறோம். இதைக்காட்டிலும் மிகுந்த இன்பம் வேறு ஒன்றிலும் இல்லையென்பது எங்கள் முடிவு. வேறொன்றையும் நாங்கள் விரும்பவில்லை. இது விளையாட்டாகச் சொன்னதன்று. இது உண்மை," என்றாள்.

விருந்தினர், "அம்மா, நீங்கள் சொல்லுவது எனக்கு விளங்கவில்லை. இன்பம் என்பதுதான் என்ன? செல்வர்களாயிருந்தபொழுது காணாத இன்பத்தை இப்பொழுது என்ன கண்டுவிட்டீர்கள்? நீங்கள் தெளிவாய் எடுத்துரைக்க வேண்டும்," என்றார்.

அவள், "நாங்கள் செல்வத்தை இழந்துவிட்டோம் என்கிறீர்கள்! செல்வம் என்பது உள்ளத்தின் நிறைவே தவிர, வேறன்று. எவ்வளவு பொருள் கிடைத்தாலும், எவ்வளவு செல்வராயிருந்தாலும், திருத்தியடையாமல், பணந்தான்குறி என்று அதிலேயே கருத்தைச் செலுத்திக் கவலை கொள்ளும் மனிதரைச்

செல்வர் என்று எப்படிச் சொல்லுவது? மிகுந்த செல்வத்தைப் பெற்றிருந்தும் அவர்களுக்கு மனக்குறை இருந்துகொண்டேதான் இருக்கும். அவர்களே வறியவர்கள். வறியவனுயிருந்தும் திருத்தி கொண்ட உள்ளத்தை யுடையவனே செல்வன் என்று சொல்லவேண்டும். '**போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து**,' என்ற முதுமொழியையும் நீங்கள் கேட்டிருக்கலாம்; '**செல்வம் என்பது சிந்தையின் நிறைவே**,' என்று குமரகுருபரர் கூறுகிருரே! முன்பு எங்களுக்கு ஏராளமாய் நிலம் இருந்தது; தோப்புகளும் உண்டு; நூற்றுக்கணக்கான கால்நடைகள் இருந்தன. இவ்வளவு இருந்தும் எங்கள் மனம் திருத்தியடைந்ததா? 'இன்னும் நிலங்களை வாங்க வேண்டும்; பணத்தைச் சேர்க்க வேண்டும்; ஒரு குறுநில மன்னராகவோ, அரசராகவோ திகழ வேண்டும்,' என்றெல்லாம் எண்ணிக் கொண்டிருந்தோம். இவ்விதம் மனம் ஒன்றை விட்டு மற்ருென்றில் பாய்ந்து திருத்தியடையாமல் எப்பொழுதும் குழப்பத்தையே விளைத்துக்கொண்டிருந்தது. அப்பொழுது எங்களைச் செல்வர்கள் என்று சொல்வது பொருத்தமாகுமா? உள்ளதைக் கொண்டு திருத்தியடைபவரே செல்வர். அவரே பேரரசர் என்று சொல்ல வேண்டும்.

“ ஆசைக்கோ ரளவில்லை, அகிலமெல் லாங்கட்டி
ஆளினும் கடல்மீதிலே
ஆணைசெல வேநினைவர் ; அளகேசன் நிகராக
அம்பொன்மிக வைத்தபேரும்
நேசித்து ரசவாத வித்தைக் கலைந்திடுவர் ;
நெடுநாள் இருந்தபேரும்
நிலையாக வேயினும் காயகற் பந்தேடி
நெஞ்சுபுண் ணுவர் ;எல்லாம்
யோசிக்கும் வேளையில், பசிதீர உண்பதும்
உறங்குவது மாகமுடியும் ;
உள்ளதே போதும் ;நான் நானெனக் குளறியே
ஒன்றுவிட் டொன்றுபற்றிப்
பாசக் கடற்குளே வீழாமல் மனதற்ற
பரிசுத்த நிலையையருள்வாய்
பார்க்குமிடம் எங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணனந்தமே!”

என்று தாயுமானவர் திருவாய் மலர்ந்தருளி யிருக்கிருர்.

“செல்வராயிருக்கையில் எங்களுக்கு ஒரு நாளாவது மனத்தில் அமைதி என்பதே இல்லை ; ஏதாவது ஒரு கவலை இருந்துகொண் டேயிருக்கும். ‘மாடுகள் நோயால் இறந்து விடுமோ!’ என்ற கவலை ஒரு பக்கம் ; ‘மழை பெய்யவில்லையே ! பயிர்கள் தீய்ந்துவிடுமோ!’ என்ற கவலை வேறு. ‘பாங்கியில் போட்ட பணம் மோசம் போய்விடக்கூடாதே !’ என்ற கவலையும் ஏற்படும். ஓர் அச்சம் நீங்கினுல் இன்னென்று தோன்றும். வேலைக்காரர்களின் தொல்லை ஒரு புறம். அவர்கள் சரியானபடி வேலை செய்கிறதில்லை. உயர்ந்த கூலி மட்டும் வாங்குவதிலேயே அவர்கள் கருத்துடையவர்

களாயிருந்தார்கள். குறைந்த கூலியைக் கொடுத்து மிகுந்த வேலையை அவர்களிடம் வாங்க நாங்கள் முயற்சி செய்தோம். இதனல் நாங்கள் தேடிய பாவம் வேறு. சில நேரங் களில் வீட்டிலுள்ள நகைகள், விலையுயர்ந்த பொருள் முதலியவை திருட்டுப்போய்விடுமோ என்று இரவு முழுவதுங்கூட அடிக்கடி திடுக் கிட்டு எழுந்திருப்போம்.

‘ இன்னல் தரும்பொருளை ஈட்டுதலும் துன்பமே ;
பின்னதனைப் பேணுதலும் துன்பமே ;—அன்னது
அழித்தலும் துன்பமே ; அந்தோ ! பிறர்பால்
இழத்தலும் துன்பமே யாம்.’

என்பது முதியோர் மொழி. இவ்விதம் மனத் திற்கு ஓயாத கவலை இருந்தால் இன்பம் எப் படி உண்டாகும்? கவலையற்று, அச்சமற்று, துன்பமற்று மனமிருந்தாலல்லவோ இன்ப மென்பது ஏற்படும்?

“ தவிர, மனிதன் உண்டு உடம்பைப் பெருக்கி உறங்குவதற்காகவா உலகில் வாழ வேண்டும்? நம்மைப் படைத்த ஆண்டவரிடத் தில் அன்பு பூண்டு அவர் அருளைப் பெற வேண்டாவா? ஆண்டவரை நினைப்பதற்கு எங்களுக்கு நேரமே இல்லாமலிருந்தது. நல்ல சிந்தனை செய்வதற்கும், நல்வழிப்படுவதற் கும், பாவங்களைப் போக்குவதற்கும், நாம் கட வுளை அடிக்கடி வேண்டுவது இன்றியமையா தது. நமது உடம்பு வளர்வதற்கு உணவு இன்றியமையாதது போல, நமது ஆன்ம வளர்ச்சிக்கு இறைவரிடம் முறையிடுதல்

அவசியம். நாங்கள் கடவுளையே மறந்து விட்டோம்.

"இதனால் நான் பணத்தையே தேட வேண்டாவென்று சொல்ல வரவில்லை. அதி லேயே விருப்பங்கொண்டு, செருக்கடைந்து, கடவுளை மறந்து, மனம் பலவாறு உழன்று, கெட்ட எண்ணங்களிலும் பாவச் செயல்களி லும் ஈடுபடாதிருக்க வேண்டும். முன் பிறவி யின் நல்வினையால் கடவுள் இச்செல்வத்தைக் கொடுத்தார் என்றெண்ணி, செல்வம் நிலைத் திராது ஆகையால் நல்ல செயல்களுக்கு அது பயன்படும்படி செய்ய வேண்டும். அதற்குரிய மனத்தை அளிக்குமாறு கடவுளை வேண்ட வேண்டும். பெருஞ்செல்வம் ஒருவனைச் செருக்குடையவன் ஆக்கிவிடுகிறது. அவன் ஆடம்பரமாகத் தன் காலத்தைக் கழிக்கிறான்; கடவுளை நினைப்பதும் இல்லை. 'ஒட்டகம் ஊசி யின் காது வழியாக நுழைந்தாலும் நுழைய லாம். பணக்காரன் மோட்சத்தை அடைய முடியாது,' என்று ஏசுநாதர் சொன்னது இதைக் குறித்துதான் என்று நினைக்கிறேன்," என்றாள்.

விருந்தினர், "இப்பொழுதுள்ள நிலைமை யில் நீங்கள் என்ன இன்பத்தைக் காண்கிறீர் கள்?" என்றார்.

அவள், "நானும் என் கணவரும் காலை யில் எழுந்ததும், ஒருவருக்கொருவர் அன் பான வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு அமைதியாய் வாழ்கிறோம். தலைவருக்கு எங்க

ளால் பயன் ஏற்பட வேண்டுமென்றெண்ணி, எங்கள் ஆற்றலுக்குத் தக்கபடி சிறிதும் கபடின்றி மனமுவந்து உழைக்கிறோம். எங்களுக்கு நல்ல உணவும் உடைகளும் கிடைக்கின்றன. எங்கள் மனம் அமைதியாயிருக்கிறது. கவலையோ, அச்சமோ, பகையோ, சினமோ யாதொன்றும் மனத்தை வருத்துவதில்லை. எங்கள் கடமையைச் சரிவரச் செய்கிறோம்; வேறொன்றிலும் பற்றுதல் வைக்கிறதில்லை. எல்லாவற்றையும் ஆண்டவரிடத்தில் விட்டுவிட்டுக் கவலையற்று இருக்கிறோம். இது எங்களுக்கு மகிழ்ச்சியாயிருக்கிறது.

"உடம்பை மட்டும் வளர்த்தல் போதாது. ஆன்ம வளர்ச்சியும் வேண்டும். 'ஆன்மப் பயிற்சி செய்ய எங்களுக்குப் போதிய ஓய்வு இருக்கிறது. கடவுளை நினைத்து அவரிடம் எங்கள் வேண்டுகோளைச் செலுத்தப் போதிய ஓய்வு நேரம் இருக்கிறது. செல்வராயிருந்த வரையில் நாங்கள் கடவுளை நினைக்கவில்லை; செல்வம் எங்கள் அறிவை மறைத்துவிட்டது. துன்பங்களே அவரை நினைக்கும்படி செய்தன. முப்பது ஆண்டுகளாகத் தேடியும் காணாத இன்பத்தை நாங்கள் இப்பொழுது அடைந்திருக்கிறோம்," என்றாள்.

அப்பொழுது அங்கிருந்தவர்கள் எல்லாரும் சிரித்தார்கள்.

"நண்பர்களே, இவ்விதம் சிரிக்காதீர்கள். இது கேலி பண்ணக்கூடிய செயலன்று; வாழ்க்கையின் உண்மை என்பதை நீங்கள்

அறியுங்கள். நாங்களும் எங்கள் செல்வத்தை இழந்ததும் துயரத்தால் அழுதோம். பின்பு கடவுள் எங்கள் மேல் அருள் கூர்ந்து உண்மை ஒளியினைக் காட்டினர். இதை நாங்கள் எங்கள் மனத்தைத் தேற்றிக்கொள்வதற்காக மட்டும் சொல்ல வரவில்லை. உங்கள் நலத்தைக் கருதியே இதைச் சொல்லுகிறோம் என்பதை நீங்கள் அறியவேண்டும்,'' என்றார் குமாரசாமி முதலியார்.

வந்த விருந்தினர், ''மெய்யறிவைப் புகட்டக் கூடியதும், உண்மை நெறியைக் காட்டக் கூடியதுமான ஓர் அரிய சொற்பொழிவு என்றே இதைச் சொல்ல வேண்டும்! குமாரசாமி முதலியார் உண்மையைத்தான் சொல்லியிருக்கிறார். வேதங்களிலும் இதுதான் சொல்லப்பட்டிருக்கிறது,'' என்றார்.

பின்னர் எல்லாரும் சிரிப்பதை விட்டுச் சிந்தனையில் ஆழ்ந்தனர்.

---

## கட்டுரைப் பயிற்சி :

1

1. விளையாட்டு எப்படி வினையாயிற்று ?
2. பார்வதி அம்மாள் எப்படிப்பட்டவள் ? அவள் கூறிய அறிவுரை யாது ?
3. உண்மை ஞானிகள் எப்படியிருப்பார்கள் ?
4. ஏசுநாதர் குழந்தைகளை எப்படிப் பாராட்டியிருக்கிறார் ?

2

5. சுந்தரேசன் எப்படிப்பட்டவன் ?
6. சுந்தரேசன் மனைவி கண்ட கனு யாது ? அஃது எப்படிப் பலித்தது ?
7. சுப்பனைப் பற்றி நீ அறிவது யாது ?
8. உண்மை எவ்வாறு வெளியாயிற்று ?

3

9. குடியானவன் எப்படிப்பட்டவன் ?
10. அவனைக் கெடுக்கக் குட்டிச்சாத்தான் செய்த சூழ்ச்சி என்ன ?
11. மக்கள் எதனால் கெட்ட பழக்கங்களை மேற்கொள்கிறார்கள் ?

4

12. நெல் அளவிலும் சுவையிலும் குன்றி வருவதற்கும், மக்கள் உடல் நலமிழந்து வருவதற்கும் மூத்த கிழவன் கூறிய காரணங்களை விளக்கி ஒரு கட்டுரை எழுதுக.

5

13. செல்வர் வேதாசலத்தின் சிறப்பியல்புகள் யாவை ?
14. அவரைப்பறறி அடிமைகள் கொண்டிருந்த கருத்து யாது ?
15. அழகப்பன் கூறிய சூளுரை யாது ? அது எவ்வாறு நிறைவேறியது ?
16. அழகப்பன் செய்த அடாச்செயல் யாது ?
17. எது பொறை ?

6

18. உண்மையான இன்பத்தைப் பற்றிக் குமாரசாமி முதலியாரின் மனைவி வெளியிட்ட கருத்துகள் எவை ?

## மதிப்புரை

*Sir P. S. Sivaswamy Aiyar.* **The Stories selected are interesting and your rendering of them very easy and readable and suitable to our children. You have done well in adapting the stories for Tamil children by giving a local colour and background.

*Sri C. Rajagopalachariar.* **It is exceedingly well done and with particular attention to its serving as a school text-book.

*Sri K. S. Ramaswamy Sastri.* **The stories of Tolstoy as adapted by you form pleasant and instructive reading.

வெள்ளக்கால் ராவ்சாகிப் வெ. ப. சுப்பிரமணிய முதலியார். **எளிய இனிய தெளிவான நடையிலெழுதப்பட்டனவாகவும், படிப்போருக்கு நல்லொழுக்கமும் நல்லறிவும் வளரச் செய்வனவாகவும், ஆண்பாலார் பெண்பாலார், பெரியோர் சிறியோரெல்லாரும் இனிது படித்துப் பயனடையத் தக்கவையாகவுமிருக்கின்றன.

*The Hindu.* **Rendered into effective simple prose**attractive to juvenile readers.**forms suitable reading for children.

*The Madras Mail.* **Easily bring forth the central theme of all Tolstoyan writings namely the moral uplift of both the individual and the society. It will prove useful in the inculcation of noble ideals in children.

*The Prabuddha Bharata.* **The book is written in simple prose and forms suitable reading matter for children. It is not mere translation, for

the book draws original material from Tamil life and gives apt quotations from Tamil poets.

**சுதேசமித்திரன்.** **தமிழ் நாட்டு வாடையுடன் கூடியது. *அழகிய எளிய நடையில் எல்லாருக்கும் தெரியும் முறையில் எழுதப்பட்டுள்ளது. *பாமர மக்களை எளிதில் வயப்படுத்தும் தன்மை வாய்ந்தது. புஸ்தகம் மொழி பெயர்ப்பாகக் காணப் படாமல் தனி முதற்புத்தகமாகத் தோன்றுகிறது.

**தமிழ் நாடு.** மொழி பெயர்ப்பில் இது ஒரு புதிய பாணி. ருஷ்யப் பேரறிஞர் டால்ஸ்டாயே தமிழருக்காகத் தமிழில் எழுதிய மாதிரி அமைந்திருக்கிறது மொழி பெயர்ப்பு. **மூலக் கருத்து முறிந்துவிடாமல் எல்லாரும் படித்துப் பரவசிக்கும் ரீதியில் தமிழ்ப்படுத்தப்பட்டிருக்கின்றன ஆறு கதைகளும்.

*The Ardra.* His style is easy, clear, smooth and correct and *makes the book delightful reading. It deserves to be widely read by pupils of the Tamil Country.*

*The Scholar.* Has been written in simple and chaste Tamil which can be easily understood by our children. The stories selected are interesting and are calculated *to teach our children good ideals and nobility of character.*

**ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்.** **இனிய, தெளிவான எளிய நடையில், படிப்போரது மனத்தைக் கவரும் முறையில் ஆசிரியர் தமிழருக்கு அளித்துள்ளார். *இந்நூலை இரு பாலாரும், இளைஞரும், முதியோரும் கற்று இன்புற்றுப் பயனடைவாராக. பள்ளிப் பிள்ளைகள் இதனை வாங்கி வாசிப்பாராக.

*Service.* *Has fulfilled a long felt need of our schools for a suitable translation of Tolstoy's tales.

**கலை மகள்.** **இத்தகைய புத்தகங்கள் பள்ளிக்கூடங் களில் வைத்து ஆதரிக்கத்தக்கனவாகும்.



